ஸ்ரீ துணை.

# திருக்குற்றாலக்குறவஞ்சி.



இஃது,

களத்தூர்த் தமிழ்ப்புலவர்

வேதகிரிமுதலியார்-குமாரர்

ஆறுமுகமுதலியாரால்

பரிசோதித்து,

அ-வீராசாமிநாயுடு அவர்களால்

தமது

சற்குணநிதியச்சுக்கூடத்தில்

பதிப்பிக்கப்பட்டது.



பிரஜோற்பதி ௵ - தைமீ

# விளம்பரம்.

இதனால் சகலருக்குந் தெரிவிப்பதுயாதெனில் சென்னபட்டணம் சீங்கான்கடைக்கடுத்த பாபன்ரோட்டில்-௱௮௪-வது நெம்பருடைய புத்தகஷாப்பிலும், கும்பகோணம் பெரியகடைத்தெருவிலிருக்கும் உப்புக்கடை நாராயணசாமிநாயக்கரிடத்திலும், மதுரை புதுமண்டபத்தில் புத்தகவியாபாரஞ்செய்யும் சண்முகபிள்ளையிடத்திலும், திரிசிரபுரம் தேரடிக்கடைத்தெருவிலிருக்கும் தி. சபாபதிபிள்ளையிடத்திலும், பாலக்காட்டில் ஷாப்புக்கடைவைத்திருக்கும் அப்பாவுபிள்ளையிடத்திலும், பலவித தமிழ்கிரந்தங்களும், அகஸ்தியர்முதலிய பெரியோர்கள் திருவாய்மலர்ந்தருளிய வைத்தியசாஸ்திரங்களும் - ஆழ்வாராதிகள்அருளிச்செய்த திவ்வியப்பிரபந்தங்களும், கம்பராமாயணவசனமும், சில ஜோசியசாஸ்திரங்களும், வேண்டியவர்கள் விலைக்குப்பெற்றுக்கொள்ளலாம்.

## இப்போது நூதனமாயச்சிட்டிருக்கும் புத்தகங்கள்.

மரணகண்டியென்னும்-ஜோதிஷசாஸ்திரம்.

நவக்கிரகசிந்தாமணியென்னும்-ஜாதகசூடாமணி.

## அச்சிட்டுவரும் புத்தகங்கள்.

ஸ்ரீராமர்மகாவிந்தம்

மார்க்கண்டன்சரித்திர அம்மானை

தேரையர்பெருநூல்காவியம் தரூா

தன்வந்திரிதைலம் ரூா

கணிதாமிர்தமென்னும்-ஜோதிஷசாஸ்திரம்.

அஸ்வனிதேவர்வைத்தியம் ா

தேரையர்காசலை ஙா

சாவித்திரிநாடகம்

இங்ஙனம்.

அ - வீராசாமிநாயுடு.

திருச்சிற்றம்பலம்.

# திருக்குற்றாலக்குறவஞ்சி.



### விநாயகர் துதி.

#### ஆசிரிய விருத்தம்.

பூமலியி சுழிமாலைபுனைந்தகுற்றாலத்தீசர்
கோமலர்ப்பாதம்போற்றிக்குறவஞ்சித்தமிழைப்பாட
மாமதத்தருவிபாயுமலையெனவளர்ந்தமேனிக்
காமலிதருப்போலைந்துகைவலான்காவலானே.

### சுப்பிரமணியக்கடவுள் துதி.

#### ஆசிரியவிருத்தம்.

பன்னிருகைவேல்வாங்கப்பதினொருவர்படைதாங்கப்பத்துத்திக்கும்
தன்னவவீரரும்புகழமலைகளெட்டுங்கடலேழுநாடியாடப் [ன்றாய்த்
பொன்னின்முடியாறேந்திடஞ்சுதலையெனக்கொழித்துப்புயநான்கு
தன்னிருதாடருமொருவன்குற்றாலக்குறவஞ்சித்தமிழ்தந்தானே.

### திரிகூடநாதர் துதி.

#### ஆசிரியவிருத்தம்.

இலைகளாய்க்கிளைத்தபலாக்கொம்பெலாஞ்சதுர்வேதக்கிளைகளீன்ற
களையெலாஞ்சிவலிங்கங்கனியெலாஞ்சிவலிங்கக்கனிகளீன்ற
சுளையெலாஞ்சிவலிங்கம்வித்தெலாஞ்சிவலிங்கச்சொரூபமாக
விளையுமொருகுறும்பலவின்முளைத்தெழுந்தசிவக்கொழுந்தைவேண்
[டுவோமே

### குழல்வாய்மொழியம்மை துதி.

#### ஆசிரியவிருத்தம்.

தவளமதிதவழ்குடுமிப்பனிவரையின்முளைத்தெழுந்துதகைசேர்முக்
பவளமலைதனிலாசைபடர்ந்தேறிக்கொழுந்துவிட்டுப்பருவமாகி. [கட்
புவிமூதரைப்பூங்கடப்பந்தாமமாயுமீன்றருகோட்டாடலீன்று
குவலயம்பூத்தருள்கொடியைக்கோதைகுழல்வாய்மொழியைக்கூற
[வோமே

### மூவர் துதி-ஆசிரியவிருத்தம்.

தலையிலேயாறிருக்கமாயிக்காகத்தாங்குசடலேழுறைத்ததிருக்குற்
றாலர், சிலையிலேதடித்தடட்புயத்தைவாழ்த்திச்செழித்தகுறவஞ்சி
நாடகத்தைப்பாட, வலையிலேயலைபிதக்கவேறிணுமதத்தியிலேபூணை
யந்நாளழைப்பித்தானும், கலையிலேகிடைத்தபொருளாற்றிற்போட்டு
க்கணகுளத்திலேடுத்தானுங்காப்பதாமே.

## குற்றாலக்குறவஞ்சி.

### அகத்தியர்வாதவூரர்துதி.

ஆசிரியவிருத்தம்.

நித்தர்திரிகூடலிங்கர்குறவஞ்சிநாடகத்தைநிகழ்த்தவேண்டி
முத்தர்திருமேனியெல்லாமுருகவேதமிழுரைத்தமுனியைப்பாடி
இத்தனுவிலாத்துமம்விட்டிறங்குநாட்சிவேட்டுமெய்வந்தேறுவண்ணம்
பித்தனடிதுணைசேர்ந்தவாதவூரானடிகள்பேணுவோமே.

### சரஸ்வதிதுதி.

ஆசிரியவிருத்தம்.

அடியிணைமலருஞ்செவ்வாயாம்பலுஞ்சிவப்பினாளை
நெடியபூங்குழலுமைகண்ணீலமுங்கறுப்பினாளைப்படிவ
மும்புகழுஞ்சங்கப்படிகமும்போல்வெளுப்பினாளைக்
கொடியனைத்திருக்குற்றாலக்குறவஞ்சிக்கியம்பும்வாமே.

### நூற்பயன்.

ஆசிரியவிருத்தம்.

சிலைபெரியவேடனுக்குநரிக்கும்வேதச்செல்வருக்குந்தேவருக்
குமிரங்கிமேனாட், கொலைகளவுகட்காமங்குருத்துரோகங்கொடியபஞ்ச
பாதகமுந்தீர்த்ததாலே, நிலவணிவார்குற்றாலநினைத்தபேர்களைனைத்த
வரம்பெறுவாது நினைக்கவேண்டிப், பலவளஞ்சேர் குறவஞ்சிநாடகத்
தைப்படிப்பவர்க்குங்கேட்பவர்க்கும்பலனுண்டாமே,

### அவையடக்கம்-ஆசிரியவிருத்தம்.

தாரிணைவிருப்பமாகத்தலைதலில்முடிக்குந்தோறும்
நாரிணைப்பொல்லாதென்றுநறுமலர்த்தார்தள்ளுவாரோ
சீரியதமிழ்மாலைக்குட்செல்வர்குற்றாலநாதர்
பேரினுமெலனதுசொல்லைப்பெரியவர்தள்ளார்தாமே.

### கட்டியக்காரன்வருகிற-விருத்தம்.

தேர்கொண்டவசந்தவீதிச்செல்வர்குற்றாலத்தீசர்
பார்கொண்டவிடையிலேறும்பவனியெச்சரிக்கைகூற
நேர்கொண்டபுரிநூன்மார்புநெடியகைப்பிரம்புமாகக்
கார்கொண்டமுகிலைமென்னக்கட்டியக்காரன்வந்தான்.

இ-ம்-தோடி-தாளம்-சாப்பு

கண்ணிகள்.

பூமேவுமறுவேந்தர்தேவேந்தர்முதலோரைப்
புரந்திடுஞ்செங்கோலனைபிரம்புடையான்
உ. மாமேருச்சிலையாளர்வாதர்குற்றாலநாதர்
வாசற்கட்டியக்காரன்வந்தனனே.

கட்டியக்காரன்-சொல்லுகிற-விருத்தம்.

மூக்கெழுந்த முத்துடையார் அணிவருக்குந் தண்கையார் ஊர்வீதி
வாக்கெழுந்த தூதுமுனிக் காட்டுமறிவெழுந்த கரங்காட்டும் வள்ளலார் சீர்த்,
கேக்கெழுந்த தமரநான்குஞ் சிலம்பெழுந்த பாகர்விடைச் சிலம்பிவீ
தி, மேக்கெழுந்த மதிகுடிக்கிழக்கெழுந்த ஞாயிறுபோல் மேவினாரே.

## திரிகூடநாதர்ப்பவனிவருதல்.

தரு-இராகம்-பந்துவராளி-தாளம்-சாப்பு

பல்லவி,

பவனிவந்தனரே-மழவிடைப்- பவனிவந்தனரே.

அநுபல்லவி.

அவனிபோற்றிய குறும்பலாவுறை மவுனநாயகரான நாயகர்
சிவனுமாயரியயனுமானவர் கவனமால்விடையதனிலே (பவனி)

[சரணங்கள்.]

௧. அண்டர்கூட்டமு முனிவர்கூட்டமு மசுரர்கூட்டமு மணிதராகிய [வே
தொண்டர்கூட்டமு மிமைப்பிலாரெனச் சூழ்ந்து தனித்தனி மயங்க
பண்டைநாரிவர் தேவரிவரெனப் பகுத்து நிரைவிய வேலைதோறுந்
தொறும், மண்டலீகரா நந்தி ராப்படி மகுடகோடியிற்புடைக்கவே

௨. தடுப்பதொருகரங் கொடுப்பதொருகரந் தரித்தசுடர்மழு விரித்ததொ
ருகரம், எடுத்தசிறுமதி பிடித்ததொருகரமிலங்கைப்பணியனுற்றுலங்
கவே, ஆடுத்தவொருபுலி தொடுத்தசோமனும் மானைகொடுத்தவிதானை
ச்சேலையும், உடுத்ததிருமருங்கசைய மாலயன் றேடுத்தபரிகரிமிசை
யலே. (பவனி)

தொடருமொருபெருச்சாளியேறிய தோன்றல்செயப்படைதாங்க
வே, படல்குலாவியந் தாகைவாகனத்திரசுவேல்வலம்வாங்கவே
படலமார்பனிற் கொன்றைமாலிகை பதக்கமணியொளிதேங்கவே
புடையதாபகன்வரவுகண்டுகண்டுலகெலாந்தழைத்தோங்கவே (பவ)

இடியின்முழக்கொடுபடருமுகிலெனயானைமேற்கனபேரிமுழக்க
மும், தடியின்முழக்கமுமபாந்து திசைக்கரி துதிக்கையாற்செவிபு
தைக்கவே, அடியார்முழக்கிய திருப்பல்லாண்டிசையடைத்தசெவிக
ளுந்திறக்கமூவர்கள், வடிசெய்தமிழ்த்திருமுறைகளொருபுறமறைக
ளொருபுறமவிளங்கவே, (பவனி)

சனகதட்புருகின்னரங்கழலாசவிளையிழற்றவே
டினர்திருமுத்தின்சிவிகைகவிகைபொன்றலைவட்டநிழற்றவே
வநிதைமார்பலருஞ்சஞ்சாமரைவரிசைவிசிறிகழற்றவே
தனதனிந்திரன்வருணன்முதலியசகலதேவருங்கழத்தவே (பவனி

௬, சைவர்மேவிடச்சமணர்கீழிடச்சகலசமயமுமேற்கவே
மைவலாழியங்கருணைமாலொடுகமலத்தோன்புடைதாக்கவே.
ஐவர்நாயகன்வந்தனன்பலவமரர்நாயகன்வந்தனன்
தெய்வநாயகன்வந்தனனெனச்சின்னமெடுத்தெடுத்தார்க்கவே(ப)

எ, சேனைபெருக்கமுங்காணப்பெருக்கமுந்தேரின்பெருக்கமுந்தாரின்
பெருக்கமும்,ஆனைப்பெருக்கமுங்குதிரைப்பெருக்கமுமவனிமுழு
தும்நெருக்கவே, மோனைக்கொடிகளின்காடுநெடுவெளிமூடியடை
க்கவும்மோடியிருண்டபி,ஞானச்சுடர்விரியிடபகேதனமெழுந்து
திசைதிசைவிளங்கவே. (பவனி)

அ. கொத்துமலர்க்குழல்தெய்வமங்கையர்குரவைபரவையை நெருக்க
வே, யொத்ததிருச்செவியிருவர்பாடல்களுலகமேழையுமுருக்கவே
மத்தளம்புயல்போன்முழக்கிடமயிலனார் நடம்பெருக்கவே, சத்
தியபிராட்டி கௌரிகுழன்மொழித்தலையலாவிடவிருக்கவே. (பவனி)

பவனிகாணப் பெண்கள்வருகின்ற

விருத்தம்.

பாலேறும்விடையில்வருந்திரிகூடப் பெருமானார்பவனிகாணக்
காலேறுங்காமனுக்குக்கையேறும்படைப்பவுஞ்சாய்க்கன்னிமார்கள்
சேலேறுங்கலகவிழிக்கணைதீட்டிப்புருவநெடுஞ்சிலைகள்கோட்டி
மாலேறப்பொருதமென்றுமணிச்சிலம்புமுரசறையவருகின்றாரே.

பெண்கள்சொல்லுகின்ற-கண்ணிகள்

இராகம் - புன்னாகவராளி - சாப்புதாளம்.

௧. ஒருமானைப்பிடித்துவந்த பெருமானைத்தொடர்ந்துவரு
மொருகோடிமான்கள்போல வருங்கொடிமடவார்

௨. புரிநூலின்மார்பனிவனயனென்பாரயனுமிற்
பொங்கரவமேதுதனிச் சங்கமேதென்பார்

௩. விரிகருணைமாலென்பார் மாலாகில்விழியின்மேல்
விழியுண்டோமுடியின்மேல் முடியுண்டோவென்பார்

௪. இருபாலுந்தான்முகனுந் திருமாலும்வருகையா
லீசனிவன்றிரிகூட வாசனிவனென்பார்

௫. ஒருகைவளைபூண்டபெண்கள் ஒருகைவளைப்பூணமறந்
தோடுவார்நகைப்பவரா நாடுவார்கவிழ்வார்

௬. மெய்வளையுமறுவுடையதெய்வநாயகன்முடித்த
வெண்மதியம்விளங்குதெங்கள் பெண்மதிபோவென்பார்

௭. இருதனத்துரவிக்கைதன்னை யுராயிலுடைதொடுவா
இந்துவுண்டாவிக்கையெனச் சந்தமூலக்கிடுவார்

அ ஒருதழுண்டிப்புறம்போகக் கண்ணுக்குமையெடுத்த
கையுமாயொருதண்ணிட்ட மையுமாய்வருவார்

கூ. நிருபணிவனன்னகரத்தெருவிலேதெருவிதேரம்
நில்லாளேஒருவசனஞ் சொல்லாளேவென்பார்

ய. பைவளைத்துக்கிடக்குமிவன்மெய்வளையும்பாய்புகட்டுப்
பசியாதோதென்றலைத்தான் புசியாதோவென்பார்

யக. இவ்வளைக்கைத்தோளழுந்தவிவன்மார்பிலழுந்தாது
வெள்முலைதமக்கெழுந்த வன்னமுலையென்பார்

யஉ. மைவளையுங்குழல்சோரக்கைவளைகொண்டானிதென்ன
மாயமோசடைதரித்த ரூயமோவென்பார்

வசந்தவல்லிவருகின்ற-விருத்தம்.

தன்னகர்ப்பெருமான்முன்போய் நாணமுங்கலையுந்தோற்ற
கன்னியர்சமுப்போற்சாட்டிக் காமவேள்கலகமூட்டிப்
பொன்னணிதிலகந்திட்டிப் பூமலர்மாலைசூட்டி
வன்னமோகினியைக்காட்டி வசந்தமோகினிவந்தாளே ;

இ-ம்-கல்யாணி-ஆதிதாளம்

கண்ணிகள்.

க. சிங்காரபூஷணம்பூட்டித்திலகந்தீட்டி
மாரனைகண்ணாலேமருட்டிச்
சிங்காரமோகனப்பெண்ணாள்வசந்தவல்லி
தெய்வரம்பைபோலவேவந்தாள்

உ. கண்ணுக்குக்கண்ணிணைசொல்லத்-திரிகூடக்
கண்ணுதலைப்பார்வையால்வெல்லப்
பெண்ணுக்குப்பெண்மயங்கவே-வசந்தவல்லி
பெடையன்னம்போலவேவந்தாள்

ஙு. கையாரச்சூடகமிட்டு-மின்னாவெல்லக்
கண்ணிலொருநாடகமிட்டு
ஒய்யாரமாகநடந்து-வசந்தவல்லி
யோகியம்போலவேவந்தாள்

ச. சல்லாபமாதலீலர்-குற்றாலநாதர்
சங்கநெடும்வீதிதனிலே
உல்லாசமாமதிபோல்-வசந்தவல்லி
பூர்வசியுதாணவேவந்தாள்

(இதுவுமது)

இ-ம்-பைரவி அடதாளசாப்பு

கண்ணிகள்.

க. இருண்டமேகஞ்சுற்றிச்சுருண்டுசுழியெறியுங்கொண்டையாள்குழை
ஏறியாடிநீண்டுசெச்சுழையாடும்விழிக்கெண்டையாள்

க திருந்துபூமுருக்கினரும்புபோலிருக்குமிதழினாள் - வரிச்
சிலையைப்போல்வளைந்துபிறையைப்போலிலங்குநுதலினாள்
உ. அரம்பைதேசவில்லும்விரும்பியாசைசொல்லும்புருவத்தாள் - பிறர்
அறிவைமயக்குமொருகருவமிருக்குமங்கைப்பருவத்தாள்
கரும்புபோலினிக்குமருந்துபோல்வடித்தசொல்லினாள் - கடல்
கத்துதிரைகொழித்தமுத்துநிரைபதித்தபல்லினாள்
ங. பல்லினழகையெட்டிப்பார்க்குமூக்கிலொருமூக்கினாள் - மதி
பழகுமவடிவுசங்கியழகுகுடிகொளுமுகத்தினாள்
வில்லு பணிபுனை வல்லிக்கமுகைவென்றகழுத்தினாள் ஜகம்
விலையிட்டெழுதயின்பநிலையிட்டெழுதுந்தொய்யிலெழுத்தினாள்
ச. கல்லுப்பதித்ததங்கச்செல்லக்கடகமிட்டசெங்கையாள் - எங்கும்
கச்சுக்கிடக்கினுந்திதிச்சுக்கிடக்குமிருகொங்கையாள்
ஒலுங்கருத்தர் மைகசலுஞ்சுழிக்குமழகுந்தியாள் மீது
ஒழுங்குகொண்டெள்ளத்தைதவிழுங்குஞ்சிறுரோமபந்தியாள்
ரு. துடியுள்ளடக்கியொருபிடியுள்ளடங்குஞ்சின்னவிடையினாள் - காமது
ட்டனாண்மனைகளுக்குக்கட்டுகதலிவாழைத்தொடையினாள்
அடுக்குவர்ணச்சேலையுடுத்துநெறிபிடித்தவுடையினாள் மட
அன்னநடையிலொருசின்னநடையிலும்நடையினாள்.
சா. வெடித்தகடலைமுளைகையெடுத்துவடிவுசெய்தமணியாள் - ஒரு
வீமப்பாகம்பெற்றகாமப்பாலுக்கொத்தசீனியாள்
பிடிக்கரந்தவல்லிகமகடிபோல்சந்தவல்லிபெருக்கமே - சத்தி
பீடவாசர்திரிகூடநாதர்சித்தமுருக்குமே

வசந்தவல்லி - பந்தடிக்கின்ற

விருத்தம்.

வித்தகர்திரிகூடத்தில் வெளிவந்தவசந்தவல்லி
தத்துறுவிளையாட்டாலே தடமுலைப்பணைப்பினாலே
தத்தமணிகரங்களசேப்ப நாலடிமுன்பின்னேயோங்கிப்
பத்தியின்மேலவாங்கிப் பந்தடிபயில்கின்றாளே

இராகம் - பைரவி - சாப்புதாளம்.

கண்ணிகள்.

க. செங்கையில்வண்டுகலின்கலினென்றுசெயஞ்செயமென்றாட - இடை
சங்கதமென்றுசிலம்புபுலம்பொடுதண்டைகலந்தாட - இருகொங்
கைகொடும்பகைவென்றனமென்றுகுழைந்துகுழைந்தாட - மலர்ப்
பைங்கொடிநங்கைவசந்தசௌந்தரிபந்துபயின்றனளே
உ. பொங்குகனங்குழைமண்டியகெண்டைபுரண்டுபுரண்டாட - குழல்
மங்குலில்வண்டுகலைந்துகண்டுமதன்சிலைவண்டோட - இனி
இங்கிதுகண்டுலகென்படுமென்படுமென்றிடைதிண்டாட - மலர்ப்
பங்கயமங்கைவசந்தசௌந்தரிபந்துபயின்றனளே

௩. சூடகமுன்கையில்வால்வளைகண்டிருகோள்வளைநின்றாட-புனை
பாடகமுஞ்சிறுபாதமுமங்கொருபாவனைகொண்டாட-நய
நாடகமாடியதோகைமயிலெனநன்னகர்வீதியிலே-அணி
யாடகவல்லிவசந்தவொய்யாரியடர்ந்துபந்தாடினளே

௪. இந்திரையோவிவள்சுந்தரியோதெய்வரம்பையோமோகினியோ மன
முந்தியதோவிழிமுந்தியதோகரமுந்தியதோவெனவேஉயர்
சந்திரசூடர்குறும்பலவீசுரர்சங்கணிவீதியிலே-மணிப்
பைந்தொடிநாரிவசந்தவொய்யாரிபொற்பந்துகொண்டாடினளே

இதுவும்-வசந்தவல்லி பந்தாடுகின்ற

விருத்தம்.

கொந்தடிப்பூங்குழல்சரியநன்னகரில்வசந்தவல்லிகொடியகாமன்
முந்தடிபின்னடியிடைபோய்மூன்றடிநாலடிநடந்துமுடுகிமாதர்
சந்தடியிற்றிருகியிடசாரிவலசாரிசுற்றிச்சகிமார்சூழப்
பந்தடிக்கும்பாவனையைப்பார்க்கவயனாயிரங்கண்படைத்திலனே

தரு-இ-ம்-காம்போதி-ஆதிதாளம்.

பல்லவி.

பந்தடித்தனள்வசந்தசுந்தரிவிந்தையாகவே

அநுபல்லவி.

மந்தரமுலையசலாடமகரக்குழைகளூசலாடச்-சுந்தரவிழியூசலாடத்
தொங்கத்தொங்கத்தொங்கத்தொம்மெனப் (பந்த

சரணங்கள்.

க. பொன்னிமிளொளியில்வந்துதாவியமின்னலின்னொளிவுபோலவே
சொன்னயத்தனைநாடிநாடித்தோழியருடன்கூடிக்கூடி
நன்னகர்த்திரிகூடம்பாடிநகுர்தத்திகுர்தம்தொம்மெனப் (ப

வசந்தவல்லி சுவாமிகளைக்காண்கிற

விருத்தம்.

வருசங்குவீதிதன்னில்வசந்தபூங்கோதைகாலி
லிருபந்துகுதிகொண்டாடவிருபந்துமுலைகொண்டாட
வொருபந்துகைகொண்டாடவொருசெப்பிலஞ்சுபந்துந்
தெருவந்துவித்தையாடுஞ்சித்திரையெதிர்கண்டாளே

தரு-இ-ம்-அடாணா-ரூபகதாளம்.

பல்லவி.

இந்தச்சித்தாரோ-வெகு

அநுபல்லவி.

வித்தைக்காரராகவிடையில்வந்தாரோ (இந்த

சரணங்கள்.

க. நாகம்புயத்திற்கட்டி நஞ்சுகழுத்திற்கட்டிக்
காகமணுகாமலெங்குங்காடுகட்டி
பாகத்தனிலொருபெண்பச்சைக்கிளிபோல்வைத்து
மோகமாயொருபெண்ணைமுடியில்வைத்தார் (இந்தச்)

உ. மெய்யிற்சிலம்பழகுங்கையின்மழுவழகும்
மையார்விழியார்கண்டால்மயங்காரோ
செய்யசடையின்மேலேதிங்கட்கொழுந்திருக்கப்
பையைவிரிக்குதம்மாபாம்புகம்மா (இந்தச்)

ங. அரிக்கண்டார்வைபாலயணங்கன்றங்கமாக
உருக்கொப்போட்டார்கண்டவுடனேதான்
பெருக்கப்பார்க்கிலெங்கள் திருக்குற்றாலர்போல
விருக்ஷிவர்செய்மாயமொருக்காலே (இந்தச்)

தோழிமார்சொல்லக்கேட்டு

வசந்தவல்லி-மோகங்கொள்ளுதல்.

விருத்தம்.

திங்களைமுடித்தார்கண்டாய்திரிகூடச்செல்வர்கண்டா
யெங்குளசித்துக்கெல்லாமிறையவரிவரோயென்று
தங்கைமார்பலருங்கூறநன்மொழித்தரன்மாற்றி
மங்கையாம்வசந்தவல்லிமனங்கொண்டாள் மயல்கொண்டாளே.

இ-ம்-புன்னாகவராளி-ரூபகதாளம்.

கண்ணிகள்.

க. முனிபரவவினியானோமுழுப்பலவின்கனிதானோ
கனியில்வைநதசெநம்குஞ்சருள்திருக்கந்தானோ
தினகரன்போற்சிவப்பழகுந்திருமிடற்றிற்கறுப்பழகும்
பணகவணிக்காணக்கண்டாற்பாவையுந்தானுருகிடாம்தா

உ. வாசனைக்கண்டுருகுதையோமயக்கமதாய்வருகுதையோ
மோகமென்பதிதுதானோமுன்னமேநானறிவேனோ
ஆகமெல்லாம்பசந்தேனேடன்னைசொல்லுக்கசந்தேனே
தாகமன்றிப்பூணேனேசரிவளையுங்காணேனே

பாங்கிகள்-புலம்பல்.

விருத்தம்.

நடைகண்டாலன்னந்தோற்குநனைகர்வசந்தவல்லி
விடைகொண்டாளெதிர்போர்ச்சங்கவீதியிற்சங்கந்தோற்றாள்
சடைகொண்டானுடைதான்கொண்டுதன்னுடைகொடுத்தாளைய
னுடைகொண்டவழக்குத்தானோவூர்கண்டதேர்கண்டாளே

இ-ம்-தோடி-தாளம்-சாப்பு.

கண்ணிகள்.

க. ஆசைகொண்டு பாரில்வீழ்ந்தான்நேசமாமென்பார்-விளை
யாடாள்பாடாள்வாடாமாலைசூடாள்சாமென்பார்
பேசொணாதோமோசமென்னமோசமோவென்பார்-சாமப்
பேயோவென்பார்பிச்சோவென்பார்மாயமோவென்பார்

உ. ஐயோவென்னசெய்வோமென்பார்தெய்வமேயென்பார்
களைப்பாச்சோவென்பார்மூச்சேதென்பார்பேச்சேதேவென் [பார்
கையிற்றிருநீறெடுப்பாரையலாமெல்லாங்குலக்
கையர்திரிகூடநாதர்கணையாரோவென்பார்

வசந்தவல்லியைப்-பாங்கிகளுபசரித்தல்.

விருத்தம்.

வானவர்திருக்குற்றாலர்மையலால்வசந்தவல்லி
தானுடல்சோர்ந்தாளென்றுதமனியமாடஞ்சேர்த்து
மேனையாரழகுதோற்றமின்னனார்விழுந்தப்பேணாக்
கூனைகொண்டமிழ்த்துவார்போற்குளிர்ச்சியால்வெதுப்புவாரே.

இ-ம்-கல்யாணி-சாப்புதாளம்

கண்ணிகள்.

க. முருந்தசந்தனக்குழம்புபூசுவார் விரகத்தீயை
மூட்டிமூட்டிவிசிறிவீசுவார்
கருதுமேரையுடலுருகுமேயென்பார்-விரித்தளிருஞ்
சரியுமேதுழுத்தம்பொரியுமேயென்பார்

உ. அருகிலிருந்துகலைசகண்டத்துவார்-எடுத்துமாதர்
அணைமேலுவாளழைக்குருகுத்திடைத்துவார்
பெருநயனார்க்குறும்பலாவினர் வசந்தமோகினிப்
பெருநிலாவினைக்குலாவினள்

வசந்தவல்லி-சந்திரதூஷணஞ்செய்தல்.

விருத்தம்.

பெண்ணிலோர்குழன்மொழிக்கோர் பங்குகொடுத்தவர் கொடுத்
தபிரமையாலே, மண்ணிலேமதுமயக்கட்டக்கனேறனைக்குமடை
யக்கந்தாரே, கண்ணிலேநெருப்பைவைத்துக்காந்துவாருடன்கூடிக்
காந்திக்காந்தி, விண்ணிலேநெருப்பையவைத்தாய் தண்ணிலாக்கொடும்
பாவி வெண்ணிலாவே. (௪௧

இராகம்-வராளி ஆதிதாளம்.

கண்ணிகள்.

க. தண்ணமுதுடன்பிறந்தாய் வெண்ணிலாவே -அந்த
தண்ணளியையேன்மறந்தாய் வெண்ணிலாவே

காரிகையாளர் தென்னாரிய நாட்டினூர் மன்மதா - எங்க
நன்னகர்க்குற்றாலர் முன்னமே செல்லுவாய் மன்மதா

பாங்கிவினவுதல்-விருத்தம்.

படியேழுடையார் திரிகூடப் படைமாமதனைப் பயிற்றியசொல்
அடியேசகியா திருக்கையிலே யதுநான் பயின்றுலாகாதோ
கொடியேமதுரம்பழுத்தொழுகுங் கொம்பேவம்புபொருதமுலைப்
பிடியேமதுகுடிக்கக் காரும் பெண்ணே பிள்ளாய்கருத்துவிள்ளாயே.

வசந்தவல்லி - பாங்கிக்குரைத்தல்.

இராகம்-கல்யாணி- சாப்புதாளம்.

கண்ணிகள்.

க. மெய்யாக்கு மெய்யர் திரிகூடநாயகர் வீதியில்-மெத்த
மையல்கொண்டேனந்தச் செய்தியைக்கேளாய் நீசகியே
செய்யசடையுந் திருக்கொன்றைமாலையழகும்-அவர்
கையின் மழுவுமென் கண்ணைவிட்டேயகலாதே.

உ. கங்கைக்கொழுந்தணி தெய்வக்கொழுந்தை நான் கண்டு-குளிர்
திங்கட்கொழுந்தையுந்தக் கொழுந்தாக்கிக் கொண்டேனே
சங்கக்குழையாளைச் சங்கமறுகினிற் கண்டு-இரு
செங்கைக்குட் சங்கமுஞ் சிந்திமறிவிட்டேனே.

ந. மன்றற்குளவிமணியம்புனைந்தாரைக் கண்டு-சிறு
தென்றற்குளவினைக் கொட்டக்கொட்டநொந்தேனே
குன்றச் சிலையாளர் குற்றாலநாதர் முன்போனேன்-மதன்
வென்றிச்சிலைகொண்டு மல்லுவெல்லப்பொருதானே.

ச. பெம்மானை நன்னகர்ப் பேராளவீதியிற் கண்டு-அவர்
கைம்மானைக்கண்டு மேலைநெகிழவிட்டேனே
செம்மேனிதன்னிற் சிறுகறுப்பானாதானைக் கண்டு-இன்று
அம்மா வென்மேனியடங்கலுமே கறுத்தேனே

ரு. வெள்ளிவிடையில்வியாழம்புனைந்தாரைக் கண்டு இந்த
நள்ளிய திங்களை ஞாயிறு போலக்கண்டேனே
எள்ளளவாணும் முறக்கமுமில்லாரைக் கண்டு-நானும்
எள்ளிடவாணுமுறக்கமுமற்றுவிட்டேனே.

பாங்கிபழித்தல் விருத்தம்.

தனைப்பெண்ணுக்கணிபோல்வந்த தமனிக்கொடியேமாதர்
துணைப்பெண்ணே வசந்தவல்லி சொன்னபேதமைக் கென்செல்வே
வனைப்பெண்ணுக்காசைபூண்டு வளர்சங்கமறுகினூடே
நனைந்த [illegible] வாரிக்கொண்டாயே.

வசந்தவல்லி-[சுவாமிகளைப்புகழ்ந்துகூறல்.
இராகம்-சௌராஷ்டிரம்- ரூபகதாளம்.
கண்ணிகள்

னவர்குற்றாலர்செய்தியின்னமின்னங்கேளாயோமானே - அவர்
யாகனத்தின்மால்விடைக்குலோகமெல்லாமோரடிகாண்மானே.

ஸ்ரீயிற்பேறல்லவோபொன்னூலிற்றேவர்செல்வமானே- தினம
சந்திரசூரியரும்வந்திறங்கும்வாசல்கண்டாய்மானே. [ஞ்

னகரிலிருக்குநாரெருக்குதானேவாசைகொண்டேன்மானே
பன்னியருமாசைகொண்டார் பன்னியருமாசைகொண்டார்மானே.

தன்னிலங்கைவாழுமொருகன்னிகைவண்டோதரியாள்மானே- அவர்
பொன்னணையிறசேர்ந்தணையளன்னதவஞ்செய்தாளோமானே.

இதுவும்-வசந்தவல்லி-பாங்கிக்குச்சொல்லுகிறு.
விருத்தம்.

வரிலேபழம்பழுத்துத்தூரிலேசுளைவெடித்துவெடித்தநீந்தேன்
பரிலேபாதாளகங்கைவந்தெனக்குதித்தபதிந்தேன்கங்கை
ல்லேசுளைபெருகுங்குறும்பலாக்காலிருக்குநிமலமூர்த்தி
பரிலேபிரமைகொண்டபெணகளிலேநானுமொருபெண்கண்டாயே

பாங்கிசொல்லல்-விருத்தம்.

வசந்தவுல்லாசவல்லியல்லிக்குவெல்லிபேகி
பசந்தம்தார்பசப்புங்கண்டால்பரமன்மேலாசைகொண்டாய்
நிசந்கருந்திருக்குற்றாலநிரந்தரமூர்த்தியும்பா
விசைநதிடக்கருமமேதோவிசையநீயிசைந்திடாயே.

வசந்தவல்லி-வருந்துதல்.
இராகம்-நாதநாமக்கிரியை-ஆதிதாளம்.
கண்ணிகள்

புரத்துநெருப்பைமூவர்க்கவித்தவர்மையல்கொண்ட என்
னொருத்திகாமநெருப்பவிக்கலார்
பருத்தமலையைக்கையிலிணக்கிலார் கொங்கையான
பருவமலையைக்கையிலிணக்கிஞர்.

அஞ்சுதலைக்குளாறுதலைவைத்தார் எனதுமனதினில்
அஞ்சுதலைக்குளாறுதலைவையார்
நஞ்சுபருகியமுகந்தொடுதவர் எனதுவாள்விழி
நஞ்சுபருகியமுகந்தொடுகிலார்.

தேவர்துனைதன்சாபந்தீர்த்தவர் வன்னமாங்குயிற்
சின்னத்துனைதன்சாபந்தீர்த்திலார்
யாவரும்புகழ்திருக்குற்றாலர்தாம் சகலபேர்க்கு
மிரங்குவாரெனக்கிரங்கிலார்பெண்ணே,

௪ ஒருநாளுக்கொருநாளில்வியனுகக்குழன்மொழிப்பெண்
ணுடன்திருக்கொலுவேனை கண்டாய்சகியே

௫. பெத்தரிக்கமிகுந்திருக்குங்குற்றாலநாதலிங்கர்
பெருங்கொலுவிற்சமய மறியாமற்சகியே

௬ சித்தரொடுதேவர்கணஞ்சிவகணங்கள்நடைசெயக்
திருவாசற்கடைநிற்பார் சிலபேர்சகியே

௭ அத்தலையிற்கடந்தவர்கள்நந்திபிரம்படிக்கொதுங்கி
ஆட்கொண்டார்குறட்டில்நிற்பார் சிலபேர்சகியே

௮. மைத்துருங்கண்மாதர்விட்டவண்டுகளுங்கிள்ளைகளும்
வாசல்தொறுங்காத்திருக்குங் கண்டாய்சகியே

௯. கோலமறையோதியசங்கரவிசுவநாதனருள்
குற்றாலச்சிவராமநம்பி செய்யுஞ்சகியே

௰. பாலாறுநெய்யாறுயபிஷேகநைவேத்தியமும்
பணிமாறுகாலமுங் கொண்டருளிச்சகியே

௰௧. நாலுமறைப்பழம்பாட்டுமூவர்சொன்னதிருப்பாட்டு
நாலுகவிப்புலவர்புதுப் பாட்டுஞ்சகியே

௰௨. நீலகண்டர்குற்றாலர்தேவியுடன்கொலுவிருப்பார்
நீக்கமில்லையயலவர்க்கும் பொதுக்காண்சகியே

௰௩. அப்பொழுதுகுற்றாலர்தேவியுடன்கொலுவிருப்பார்
ஆசைசொல்லக்கூடாது கண்டாய்சகியே

௰௪. மூப்பொழுதுந்திருமேனிதீண்டுவார்வந்துநின்று
மூபற்சிசெயயந்திருவநந்தற் கூடிச்சகியே

௰௫. கொப்பழகுகுழன்மடந்தைபள்ளியறைதனிலிருந்து
கோயில்புகுமேகாந்தச் சமயஞ்சகியே

௰௬. மைப்பழகுவிழியாயென்பெருமாலைநீசொல்லி
மருவாலைமாங்கிநீ வாராய்சகியே

கொச்சகம்.

தெண்ணீர்வடவருவித்திர்த்தத்தார்செஞ்சடையே
விண்ணீர்புனைந்தார்விரகவெம்மைக்காற்றுமல்
ஒண்ணீர்நறும்புனலாய்க்கைவலையேசெய்கணையாய்
உண்ணீரிற்கூடலுனக்கிணையுசெய்வாளே.

கூடல்சிந்து.

இ-ம்-பந்துவராளி-தாளம்-திரிபுடை.

௧. பாடிப்மறைதேடியநாயகர்பன்னகர்பணிநன்னகர்நாயகர்
பாவலர்மனுக்காவலர்நாயகர்பசுஞ்சலிபணியாளர்

௨. கோடிமதிசூடியநாயகர்குழன்மொழிபுணரழகியநாயகர்
குறும்பலாவினிற்கூடுவோராமேனிற்கூடலேநீகூடாய்

விருத்தம்.

ஆடல்வளைவீதியிலேயங்கணர்முன்போட்டசங்கமாங்குவிட்டில்
தேடல்வளைக்குறிபோலக்கூடல்வளைத் திருந்துவல்லிதியங்குபோதில்
கூடல்வளைக்கரமசையமாத்திரைக்கோலேந்திமணிக்கூடைதாங்கி
மாடமறுகூடுதிரிகூடமலைக்குறவஞ்சிவருகின்றாளே.

குறத்திவருதல்-ஆசிரியப்பா.

சைவமுத்திரையைவானின்மேற்றரிக்குந்
தெய்வமுத்தலைசேர்திரிகூடமலையான்
வான்புனல்குதட்டுமடைக்குருகினுக்குத்
தேன்புனையேறுபூஞ்சித்திரநதியான்
வரிநீர்செழிக்கவாரிநீர்கொழிக்கு
மாரிநீர்வளர்தென்னாரியநாட்டான்
கன்னிமாப்பழுத்துக்கதலிதேன்கொழித்துச்
செந்நெல்காத்தளிக்குநன்னகர்ப்பதியான்
ஓராயிரமறையோங்கியபரியான்
ஈராயிரமருப்பேந்தியயானையான்
சேவகவிருதுஜெயவிடைக்கொடியான்
மூவகைமுரசுமுழங்குமண்டபத்தான்
அண்டகோடிகளையாணையாலடக்கிக்
கொண்டல்போர்தவிக்குங்கொற்றவெண்குடையான்
வலசுந்தரிகுழல்வாய்மொழியருட்கண்
கோலவண்டிணங்குங்கொன்றைமாலிகையான்
பூவளர்செண்பககாவளர்தம்பிரான்
தேவர்கள்தம்பிரான்திருவருள்பாடி
இலகுநீறணிந்துதிலகமுமெழுதிக்
குலமணிப்பாசியுங்குன்றியும்புனைந்து
சலவைசேர்மருங்கினிற்சாத்தியகூடையும்
வலதுகைப்பிடித்தமாத்திரைக்கோலும்
மொழிக்கொருபசப்புமுலைக்கொருகுலுக்கும்
விழிக்கொருசிமிட்டும்வெளிக்கொருபகட்டுமாய்
உருவசியரம்பைகருவமுமடங்க
முறுவலின்குறும்பால்முனிக்குறும்படங்க
சமனிக்குமுனையால்சபையெலாமடங்கக்
கமனிக்குமலனுங்கடைக்கணாலடங்கக்
கொட்டியவுடுக்குங்கோடாங்கிக்குறிமுதல்
மட்டிலாக்குறிகளுங்கட்டினாலடக்கிக்

குறத்தியை வர்ணித்தல்

கொச்சகக்கலிப்பா.

முன்னங்கிரிவளைத்தமுக்கணர்குற்றாலர்வெற்பில்
கன்னங்கரியகுழற்காமக்குறவஞ்சி ‖
பொன்னின்குடம்போற்புடைத்தெழுந்தபாரமுலை
யின்னம்பருத்திட்டாலிடைபொறுக்கமாட்டாதே ‖

தரு-இராகம்-தோடி-ஆதிதாளம்.

பல்லவி.

வஞ்சிவந்தாள்-மலைக்குறவஞ்சிவந்தாள்

அநுபல்லவி.

வஞ்சிவந்தாள்திரிகூடரஞ்சிதமோகினிமுன்னே
மிஞ்சியவிரகநோய்க்குச்சஞ்சீவிமருந்துபோலே (வஞ்சி)

சரணங்கள்.

௧. நம்மையுலகெங்கும்வெல்லக் கொம்மைமுலையார்க்கும்நல்ல- செட
மையாய்க்குறிகள்சொல்லஅம்மேயம்மேயென்றுமெல்ல (வஞ்சி
௨. சோலையில்வசந்தகாலம்வாலகோகிலம்வந்தாற்போல
கோலமலைவில்லியார்குற்றாலமலைவாழுங்குற (வஞ்சி
௩. மாத்திரைக்கோலத்துடன்னச்சாத்திரங்கண்பார்வையன்னத்
தோத்திரவடிவமின்னபத்தமலர்க்கொடியென்ன (வஞ்சி

வசந்தவல்லிகுறத்தியைக்கண்டுமலையைவினவுதல்

ஆசிரியவிருத்தம்.

அந்தரதுந்துமிமுழங்குநன்னகர்க்குற்றாலலிங்கரருளைப்பாடி
வந்தகுறவஞ்சிதன்னைவசந்தவல்லிகண்டுமனமகிழ்ச்சிகொண்டு
சந்தமுலைத்துவளுமிடைத்துவளநகைப்பவளவிதழ்த்தையலேயுன்
சொந்தமலையெந்தமலையந்தமலைவளமெனக்குச்சொல்லென்றாளே.

குறத்திசொல்லல்

இராகம்-புன்னாகவராளி-ஆதிதாளம்.

கண்ணிகள்.

௧. வானரங்கள்கனிகொடுத்து மந்தியொடுகொஞ்சு
மந்திசிந்துகனிகளுக்கு வான்கவிகள்கெஞ்சு
௨. கானவர்கள்விழியெறிந்து வானவரையழைப்பா
கமனசித்தர்வந்துவந்து காயசித்திவிளைப்பா
௩. தேனருவித்திரையெழும்பி வானின்வழியொழுகு
செங்கதிரோன்பரிக்காலுந் தேர்க்காலும்வழுக்கு
௪. கூனலிளம்பிறைமுடித்த வேணியலங்கார
குற்றாலத்திரிகூட மலையெங்கள்மலையே

# குற்றாலக்குறவஞ்சி

முழங்குதிரைப் புனலருவி கழங்கெனமுத் தாடும்
முத்தமெங்கும் பரந்துபெண்கள் சிற்றிலைக்கொண் டாடும்
கிழங்குகிள்ளித் தேனெடுத்து வளம்பாடி நடிப்போம்
கிம்புரியின் கொம்பொடித்து வெம்புதினை யிடிப்போம்
செழுங்குரங்கு தேமாவின் பழங்களைப் பந்தடிக்கும்
தேனலர்சண் பகவாசம் வானுலகம் வெடிக்கும்
வழங்குகொடை மகராசர் குறும்பலவில் ஈசர்
வளம்பெருகுந் திரிகூட மலையெங்கள் மலையே
ஆடுமரவீ னுமணி கோடிவெயி லெறிக்கும்
அம்புலியைக் கவளமென்று தும்பிவழி மறிக்கும்
வேடர்கள் தினைவிளைக்கச் சாடுபுனந் தோறும்
விந்தையகில் குங்குமமுஞ் சந்தனமும் நாறும்
௫. காடுதொறு மோடிவரை யாடுகுதி பாயும்
காகமணு காமலையில் மேகநிரை சாயும்
௬. நீடுபலா வீசர்கயி லாசகிரி வாசர்
நிலைதங்குந் திரிகூட மலையெங்கள் மலையே
௭. கயிலையெனும் வடமலைக்குத் தெற்குமலை யம்மே
கனகமக மேருவென நிற்குமலை யம்மே
௮. சயிலமலை தென்மலைக்கு வடக்குமலை யம்மே
சகலமலை யுந்தனக்குள் அடக்கமலை யம்மே
௯. வயிரமுடன் மாணிக்கம் விளையுமலை யம்மே
வானிரவி முழைகள்தொறு நுழையுமலை யம்மே
௰. துயிலுமவர் விழிப்பாகி யகிலமெங்குந் தேடும்
துங்கர்திரி கூடமலை யெங்கள்மலை யம்மே
௧௧. கொல்லிமலை யெனக்கிளைய செல்லிமலை யம்மே
கொழுநனுக்குக் காணிமலை பழனிமலை யம்மே
௧௨. எல்லுலவும் விந்தைமலை யெந்தைமலை யம்மே
இமையமலை யென்னுடைய தமையன்மலை யம்மே
௧௩. சொல்லரிய சாமிமலை மாமிமலை யம்மே
தோழிமலை நாஞ்சிநாட்டு வேள்விமலை யம்மே
௧௪. சொல்லினங்கள் முழவுகொட்ட மயிலினங்க ளாடும்
திரிகூட மலையெங்கள் செல்வர்மலை யம்மே

௧. ஒருகுலத்திற் பெண்கள்கொடோம் ஒருகுலத்திற் கொள்ளோம்
உறவுபிடித் தாலும்விடோம் குறவர்குலம் நாங்கள்
௨. வெருவிவருந் தினைப்புனத்திற் பெருமிருகம் விலக்கி
வேங்கையாய் வெயில்மறைத்த பாங்குதனைக் குறித்தே
௩. அருளிலஞ்சி வேலர்தமக் கொருபெண்ணைக் கொடுத்தோம்
ஆனதனால் மலைகளெல்லாஞ் சீதனமாய்க் கொடுத்தோம்

உ௪. பரிதிசூழுமலையைத் அருவனுக்குக்கொடுத்தோம்
பாரமர்திரிகூடமலை பசுமையமலையம்மே

வசந்தவல்லிகுறத்தியை-நாட்டுவளமும்-நகர்வளமும் வினவுதல்

விருத்தம்.

கோட்டுவளமுலைகாட்டுங்கொடியின்வளமிடைகாட்டுங்குறிஞ்சிபூத்த
காட்டுவளங்குழல்காட்டுமலைவளர்ந்தாணீயுரைத்துக்காட்டுவானேன்
தோட்டுவளப்புரிகாதர்திரிகூடமலைவளருந்தோகையேயுன்
னாட்டுவளமெனக்குரைத்துக்குற்றாலத்தலவளமுநவிலுவாயே.

குறத்திசொல்லுதல்.

இராகம்-மீதரகௌளம்-தாளம்-சாப்பு.

கண்ணிகள்.

௧. கூரமாங்குயிற்சின்னக்காமத்துரைவந்தான்றுரைவந்தானென்றூத
ஆரமாமுலைமின்னாரவரவர்குற்றேர்களலங்காரஞ்செய்யப்
பாரமாமதிவெண்குடையிஞ்சப் பறக்குங்கிள்ளைப்பரிகள்மின்கொ
ஞ்சத், தேரின்மாரன்வசந்தனுலாவுந்திருக்குற்றாலர்தென்னாரியநா
டே.

௨. காரைச்சேர்த்தகுழலார்க்குநாணிக்கடலைச்சேர்ந்தகருப்பானமேக
ம், சேர்ந்தமுலைக்கிணையாகுமலையைச்சேர்ந்து சிலையொன்றுவாங்கி,
நீரைச்சேர்ந்தமழைத்தாரையம்பொடுநிலங்கொண்டலின் தேரோதி
வெய்யோன், கேரைச்சூழ்ந்திடக்கார்காலம்வெல்லுந்திருக்குற்றால
ர்தென்னாரியநாடே.

௩. சூழமதியிறங்குந்துறையிற்சொரியும்பாலைப்பருகியவாளைகள்
கூழைவாசற்பலாவினிற்பாயக்கொழும்பலாக்கனிவாழையிற்சாய
வாழைசாய்ந்தொருதாழையிற்றங்க வருவிருந்துக் குபசரிப்பார்
போல, தாழைசோரிடவாழைகுருத்திடுஞ் சந்திசூடர்தென்னாரிய
நாடே.

௪. அன்னலார்மொழிதன்னைப்பழித்ததென்றுழவர்மண்ணின் மூடுங்
கரும்பு, அன்னிமீளவளர்ந்துமடந்தையர்தோளைவென்றுகூடர்முத்
தநீன்று, பின்னுமங்கவர்மூரலைவென்றுபிரியுங்காலத்தற்பெண்மை
யைவெல்ல, கன்னல்வேளுக்குவில்லாக வோங்குங்கடவுளாரிய நா
டெங்கணாடே.

௫. தக்கபூமிக்குமுன்புள்ளநாடுசகலதேவர்க்குமன்புள்ளநாடு
முக்கண்ணன் விளையாடியநாடுமுதியநான்மறைபாடியநாடு
திக்கெல்லாம்வளர்ந்தோங்கியநாடுசிவத்துரோகமுநீங்கியநாடு, மை
க்கண்ணார்குழல்வாய்மொழிபாகர் வசந்தவாரியநாடெங்கணாடே.

௬. அஞ்சுநூறுமகங்கண்டநாடு அனேகங்கோடியுகங்கொண்டநாடு
கஞ்சயோனியுதிக்கின்றநாடுகமலவாணிதுதிக்கின்றநாடு
செஞ்சொன்மாமுனியேகியநாடுசெங்கண்மால்சிவனாகியநாடு
வஞ்சிபாகர்திரிகூடநாதர்வசந்தவாரியநாடெங்கணாடே.

௪ மாதமூன்றுமழையுள்ளநாடுவருஷமூன்றுவிளைவுள்ளநாடு
வேதமூன்றும்பலாவுள்ளநாடுவிசேஷமூன்றுங்குலாவுள்ளநாடு
போகமுன்றுநலஞ்செய்யுநாடுபுவனமூன்றுவலஞ்செய்யநாடு
நாதமூன்றுருவானவர்குற்றாலர்நாதராரியநாடெங்கணாடே.

௫. தீங்கக்காண்பதுசேர்ந்தவர்பாவம்நெருங்கக்காண்பதுகன்னலிற்செந்நெல், தூங்கக்காண்பதுமாம்பழக்கொத்துசுழலக்காண்பதுதிந்தயிர்மத்து, வீங்கக்காண்பதுமங்கையர்கொங்கைவெடிக்கக்காண்பதுகொல்லையின்முல்லை, ஏங்கக்காண்பதுமங்கலபேரிகை யீசாரியநாடெங்கணாடே.

௬. ஓடக்காண்பதுபூம்புனல்வெள்ளம்ஒடுங்கக்காண்பதுயோகியருள்ளம், வாடக்காண்பதுமின்னார்மருங்குல்வருந்தக்காண்பதுசூலுளைச்சங்கு, போடக்காண்பதுபூமியில்வித்து விலம்பக்காண்பதுகிண்கிணிக்கொத்து, தேடக்காண்பதுநல்லறங்கீர்த்திதிருக்குற்றாலர்தென்னாரியநாடே.

குறத்தி-தலமகிமைசொல்லுதல்.

விருத்தம்.

அரிகூடவயன்கூடமறைகூடத்தினந்தேடவரிதாய்நின்ற
திரிகூடப்பதியிருக்குந்திருநாட்டுவளமுமைக்கத்தெவிட்டாதம்மே
சரிகூடப்பிடிதிரியுஞ்சாலிலேயொருவேடன்கையிலேந்தி
தரிகூடுங்கைவிலைசென்றதிரிகூடத்தலமகிமைநவிலக்கேளே.

இராகம்-பிலஹரி-தாளம்- ஜம்பை

கண்ணிகள்.

க. ஞானிகளுமறியார்கள்சித்ரநதிமூல
நானறிந்தவகைசிறிதுசொல்லக்கேளம்மே
மேன்மைபெறுந்திரிகூடத்தேனருவித்துறைக்கே
மேவுமொருசிவலிங்கத்தேவாகசியமாய்
ஆனதனாலயனுமரிதானுமறியாமல்
அருந்தவத்துக்காய்த்தேடித்திரிந்தலையுங்காலம்
மோனவானவர்க்கெங்கள்கானவர்கள்காட்டு
மூதுகங்கையாறுசிவமதுகங்கையாமே.

உ. சிவமதுகங்கையின்மகிமைபுவனமெங்கும்புகழும்
செண்பகாடவித்துறையின்பண்புசொலக்கேளாய்
தவமுனிவர்கூட்டமுமவரிருக்குங்குகையுஞ்
சஞ்சீவிமுதலானவிஞ்சைமூலிகையும்
கவனசித்தராதியருமௌனயோகியரும்
சாதிருக்குங்கயிலாயமேற்றிருக்குமம்மே
நவநிதியும்விளையுமிடமவிடமதுகடந்தால்
நங்கைமார்குரவையொலிபொங்குநாட்டிலே.

காணமலர்மேலிருக்குமோனவயனார்க்குங்
காமனார்கபர்க்குமிவர்மாமனாரம்மே.

௩. பொன்னுலகிற்றேவருக்குமண்ணுலகத்தவர்க்கும்
பூதலத்தின்முனிவருக்கும்பாதலத்துள்ளார்க்கும்
அன்னவடிவெடுத்தவர்க்கும்மேனவுருவார்க்கும்
அல்லார்க்குமுன்னுதித்தசெல்வர்காணம்மே
முன்னுதித்துவந்தவரைத்தமையனெனவுரைப்பார்
மொழிந்தாலுமொழியெலாம்பழுதிலைகாணம்மே
நன்னகரிற்குற்றாலநாதர்கிளைவளர்த்த
நாளுரைப்பதரிதலதுதானுரைக்குமம்மே.

வசந்தவல்லி வினவுதல்.

விருத்தம்.

நீர்வளர்பவளமேனிநிமலர்குற்றாலநாதர்
கூர்வளம்பாடியாடுங்குறவஞ்சிக்கொடியேகேளாய்
கார்வளர்குழலார்க்கெல்லாங்கருதிநீவிருதாய்ச்சொல்லும்
சீர்வளர்குறியின்மார்க்கந்தெரியவேசெப்புவாயே.

குறத்தி-சொல்லுதல்.

தரு-இராகம்- தோடி-ஆதிதாளம்.

பல்லவி,

வித்தார-மென்குறியம்மே-மணி

அநுபல்லவி.

முத்தாரம்பூணுமுகிழ்முலைப்-பெண்ணே.
வித்தாரமென்குறியம்மே.

[சரணங்கள்.]

க, வஞ்சிமலையாளி கொச்சி கொங்கு
மக்கராடந்துளுக்காணம் மெச்சி
செஞ்சிவடகாசி நீளம் சிவணுஞ்
சிங்களமீழங்கொழும்பு வங்காளம்
தஞ்சைசிராப்பள்ளிக் கோட்டை தமிழ்ச்
சங்கமதுரைதென்மங்கலப் - பேட்டை
மிஞ்சிகுறிசொல்லிப் பேராய் இசை
வென்றுதான்பெற்றவிருதுகள்-பாராய் (வித்தார)

உ. நன்னகர்க்குற்றாலந் தன்னில் எங்கும்
நாட்டுமொன்னூற்றிரண்பத்தேழாண்டுதன்னில்
பன்னகமாமுனி போற்றத் தமிழ்ப்
பாண்டியனார்முதற்சிற்றோர்மெய்யந்த
தென்னாருஞ்சிர சபையை எங்கள்
சின்னணஞ்சாத்தேவன்செப்பேடுதந்த

முன்னாளிலேகுறி சொல்லிப் பெற்ற
மோகனமாலைதார்மோகன வல்லி (வித்தார)

௩. அன்பாய்வடகுண பாலில் கொல்லத்
தாண்டொருநூற்றிருபத்து நாலில்
தென்காசியாலய மோங்கக் குறி
செண்பகமாறர்க்குச்சொன்னபேர்நாங்கள்
நண்பாண்டியராச்சிய மூய்ய சொக்க
நாயகர்வந்துமணக்கோலஞ் செய்ய
இன்பமதுரைமீ னாட்சி
பெண்களைக்கேட்டதுஞ்சங்கத்தார் சாட்சி (வித்தார)

வசந்தவல்லி- குறிகேட்குதல்

விருத்தம்.

கலவிக்குவிழிவாள் கொண்டுகாமனைச்சிக்கிகொள்வாய்
குலவித்தைகுறியேயாற்றுக்குறவஞ்சிகுறைவைப்பாயோ
பலவுக்குள்கனியாய்நின்றபரமர்குற்றாலநாட்டில்
இலவுக்குஞ்சிவந்தவாயாளெனக்கொருகுறிசொல்வாயே.

குறத்தி- சொல்லல்.

இ-ம்- அடாணா- ஆதிதாளம்.

கண்ணிகள்.

க. என்னகுறியாகிலுநான்சொல்லுவே னம்மே - சது
ரோடுவேனைதிர்த்தபேனாவெல்லுவே னம்மே

உ. மன்னியர்கள்மெச்சுகுறவஞ்சிநா னம்மே என்றன்
வயிற்றுக்கிரந்தவுடைபோகமஞ்சிவா ரம்மே

௩. பின்னமன்றிக்கூழெனினுங்கொண்டுவா வம்மே- வந்தால்
பெரியகுறிக்கைமட்டமண்டுவே னம்மே

௪. தின்னவிலையும்பிளவுமள்ளித்தா வம்மே - கப்பல்
சீனச்சரக்குந்துகையைள்ளித்தா வம்மே

௫. அம்மெயம்மேசொல்லவாராய்வெள்ளச்சியம்மே யம்மே - உனக்
காக்கம்வருகுதுபாராய்வெள்ளச்சி யம்மே

௬. விம்முமுலைக்கன்னிசொன்னபேச்சுநன் றம்மே - நேரே
மேல்புறத்திலாந்தையிட்டவீச்சுநன் றம்மே

௭. தும்மலுங்காகமுமிடஞ்சொல்லுதே யம்மே - சரம்
சூட்சமாகப்பூரணத்தைவெல்லுதே யம்மே

அ. செம்மையிதுநன்னிமித்தங்கண்டுபா ரம்மே - திரி
கூடமலைத்தெய்வமுனக்குண்டுபா ரம்மே

குறத்திசொல்லுதல்
இ-ம்-பைரவி-ரூபகதாளம்
கண்ணிகள்.

௧. மாறுமலிநிலத்தி லறம்வளர்க்குங்கையே
மனையறத்தாலறம்பெருக்கித் திறம்வளர்க்குங்கையே

௨. வீறுகநவநிதியம் விளையுமிந்தக்கையே
மேன்மேலும்பாலமுத மலையுமிந்தக்கையே

௩. ஆறுசமயங்கள்பதி யாற்றுமிந்தக்கையே
அணங்கனையார்வணங்கிடும் போற்றுமிந்தக்கையே

௪. பேறுகநன்னகரங் காக்குமிந்தக்கையே
பிறவாதநெறிபார்க்கிலே யேற்குமிந்தக்கையே

குறத்தி தெய்வம்பரவல்
விருத்தம்.

கைக்குறிபார்க்கிலிந்தக்கைப்பிடிப்பவர்தாமெட்டுத்
திக்கும்புயுடையராவர்செகமகாசிநீயே
இக்குறிபொய்யாதென்றேயிறையவர்திரிகூடத்தில்
மெய்க்குறவஞ்சிதெய்வம்வியப்புறவணங்குவாளே

ஆசிரியப்பா.

குழல்மொழியிடத்தார்குறும்பலாவுடையார்
அழகுசந்நிதிவாழ்பலவிநாயகர்
செந்தில்வாழ்முருகாசெங்கண்மால்மருகா
கந்தனேயிலஞ்சிக்கடவுளேசரணம்
புள்ளிமானீன்றபூவையேகுறக்குல
வள்ளிநாயகியேவந்தெனக்குதவாய்
அப்பனேமேலவாசலிலரசே
செப்பருமலைமேற்றெய்வகன்னியர்காள்
ஆரியங்காவரவருட்சொரிமுத்தே
நேரியகுளத்தூர்நின்றசேவகனே
சோலமாராளிகுற்றாலநங்காய்
காலவைரவாகனகுடிகறுப்பா
முன்னடிமுருகாவன்னியராயா
மன்னியபுலிபோல்வருப்பன்றிராடா
எக்கலாதேவிதுர்க்கைபிடாரி
மிக்கதோர்குதியாய்வேண்டினனுங்களை
வந்தாழ்வினிருந்தவசந்தமோகினிப்பெண்
சிந்தையில்நினைக்குஞ்சிவலோகாதுவோ
சலைவயோபட்டோசவசதானியமோ
கலவையோபுழுகோகளபகஸ்தூரியோ

வட்டிலோசெம்போவயிரமுத்தோ
கட்டிலோமெத்தையோகட்டிவிராகனோ
வைப்பொடுசெப்போவாக்கொடுசெலவோ
கைப்படுதிரவியங்களவுபோனதுவோ
மறுவிலாப்பெண்மையல்வருந்திமுடிந்திடுதோ [illegible]
திரிகண்ணனானவர்செய்தசைமடக்கமோ
மன்னர்காயிவள்மேலமையல்சொல்லிவிட்டதோ
கன்னிதானொருவர்மேற்காயிதக்குறியோ
சேலையும்வளையுஞ்சிந்தினதியக்கமோ
ம.ஐயுமணைமூடவாய்ப்பெறுங்குறியோ
இத்தனைக்குறிகளிலெக்குறியிதுமவா
வைத்தமேனார்குறியையவதுக்கருள்வீரோ.

குறத்திசொல்-விருத்தம்.

கடித்திடுமரவப்பூண்டகருத்தர்திருக்குற்றாலர்நேயம்
பிடிக்குதுகருத்துநன்றாய்ப்பசுநறுசக்கதேவி
துடிக்குதுசென்றுசகுநாவுஞ்சொல்லுதொம்மென்னவாயில்
இடிக்குதுகுறங்கியம்மேயினிச்சொல்லக்கேளே.

குறத்தி சொல்லுதல்

இ-ம் பிலஹரி-சாப்புதாளம்.

கண்ணிகள்.

௧. சொல்லக்கேளாய்குறிசொல்லக்கேளா-யம்மே
தோகையர்க்கரசேகுறிசொல்லக்கேளாய்
௨. முல்லைப்பூவகுழலாளேநன்னகரில்வாழ்-முத்து
மோகனப்பசுங்கிளியேசொல்லக்கேளாய்
௩. பல்லக்கேறுந்தெருவிலானைநடத்தி மணிப்
பணியாபரணம்பூண்டபார்த்திபன்வந்தான்
௪. செல்வப்பூங்கோதையேநீபந்தடிக்கை-யிலவன்
சேனைகண்டவெருட்சிப்பால்காணுதேயம்மே

வசந்தவல்லி சொல்லுதல்.

இராகம்-பந்துவராளி-தாளம்-திரிபுடை.

கண்ணிகள்.

௧. நன்றுநன்றுகுறவஞ்சிநாடகக்காரி-இந்த
நாட்டணைபேர்க்கானவார்த்தைநானறியேனே
௨. ஒன்றுபோடாதேகுறிசொல்லியேவந்தாய்-பின்னை
யழப்பிப்போட்டாய்குறியுங்குழப்பிப்போட்டாய்
௩. மன்றில்வருஞ்சேனைதன்னைக்கண்டுபயந்தால்-இந்த
மையலுங்கிறுகிறுப்புந்தையலார்க்குண்டோ

௬. கொட்டைகைத்தூண்போலக்காலிலங்க- ஒட்டகம்போலேமேலில
ங்க,கட்டானதிரிகூடச்சிங்கன்-மட்டிவாய்நூவனுந்தானே.

சிங்கன்-பட்சிகளைப்பார்த்தல்.

விருத்தம்.

மூவலைமதிலுஞ்சாயமூரலால்வீரஞ்செய்த
சேவகர்திருக்குற்றாலர்திருவிளையாட்டந்தன்னில்
பாவகமாகநூவன்பறவைபோற்பறவைகூவி
மாவின்மேலேறிச்சிங்கன்வரும்பக்ஷிபார்க்கின்றானே.

தரு - இராகம் - கல்யாணி - ஆதாளம்.

பல்லவி.

வருகினுமையே-பறவைகள் வருகினுமையே.

அநுபல்லவி.

வருகினுமையேதிரிகூடநாயகர்
வாட்டமில்லாப்பண்ணைப்பாட்டப்புரமெல்லாம்
குருகுநாரையுமன்னமுந்தாராவும
கூழைக்கிடாக்களுஞ்செங்கால்நாரையும். (வருகினு)

சரணங்கள்.

௧. சென்னியிலேபுனற்கன்னியைவைத்த
திரிகூடநாதர்கிரிமாதுவேட்டையில்
மன்னனொருவன்வரிசையிட்டான்கனகை
மங்கைக்குநானும்பரிசைசெய்வேனென
அன்னசயாவுடையாகாசகங்கை
படிக்களைக்காணப்புறப்பட்டநேத்திபோல்
பொன்னிறவானெங்குந்தன்னிறமாகப்
புரிந்துபுவனந்திரிந்துகுருகினம். (வருகினு)

௨. காடைவருகுதுகம்புள்வருகுது
காக்கைவருகுதுகொண்டைக்கிலாத்தியும்
மாடப்புறவுமயிலும்வருகுது
மற்றொருசாரியாய்க்கொக்குநிரைகளெல்லாம்
கூடலையுள்ளாக்கிச்சைவம்பமோகனிக்
கூடுஞ்சமணரைநீடுங்கழுவேற்ற
ஏடெதிரேற்றியசம்பந்தமூர்த்திகள்
திட்டஇருமுத்தின்பந்தல்வைத்தாற்போலே. (வருகினு)

௩. வெள்ளைப்புறவுஞ்சகோரமுமாந்தையும்
மீன்கொத்திப்புள்ளுமாங்கொத்திபட்சியும்
கிள்ளையும்பஞ்சவர்ணக்கிளிகூட்டமுங்
கேகயப்பட்சியுநாகணவாய்ச்சியும்

உள்ளானுஞ்சிட்டும்வலியானுமன்றிலும்
ஓலஞ்செய்தேகூடிநாலஞ்சுதோற்றமாய்
துள்ளாடுங்குலசபாலம்பிராட்டியார்
கொட்டாடுமைமவர்ணப்பட்டாடைபோலவே (வருகினு)

சிங்கன்சொல்.

கொச்சகக்கலிப்பா.

ஈராயிரங்கரத்தானேற்றசங்குநான்மறையும்
ஈராயிரங்கநடஞ்செய்தவர்குற்றாலவெற்பில்
பாராய்பலமுகமும்பட்சிநிறைசாயுதையே
ஓராயிரமுகமும்பட்சிநிறைசாயுதையே

தரு-இராகம் கல்யாணி-ஆதிதாளம்

பல்லவி.

சாயினுமையே-பறவைகள்-சாயினுமையே

அநுபல்லவி.

சாயினுமையேபாயும்பறவைகள்
சந்தனக்காட்டுக்குஞ்சண்பகக்காவுக்கும்
கோயிற்குழல்வாய்மொழிமங்கைப்பேருக்குங்
குற்றாலநாயகர்சிற்றாற்றுவெள்ளம்போல் (சாயினு)

சரணங்கள்.

க. காராருஞ்செங்குளமேலப்பாட்டுபற்றுக்
காடுவெட்டிப்பற்றுநீடுசுண்டைப்பற்று
சீராரும்பேட்டைக்குளப்போடைக்காங்கேயன்
ஸ்ரீகிருஷ்ணன்மேடுமூனிக்குருகன்பேரி
ஏரிவாய்சீவலப்பேரிவடகா
லிராசகுலராமன்கண்டுகொண்டான்மேலை
மாரிப்பற்றுங்கீழைமாரிப்பற்றுஞ்சன
னேரிப்பற்றுஞ்சாத்தனேரிப்பற்றுஞ்சுற்றி (சாயினு)

உ. பாறைக்குளந்தெற்குமேல்வழுதிக்குளம்
பாட்டப்பெருங்குளஞ்செங்குறிஞ்சிக்குளம்
ஊரணிப்பற்றுந்திருப்பணிநீள
முயர்ந்தபுளியங்குளந்துவராங்குளம்
மாறனேரிக்குளமளத்தளம்பாறை
வழிமறித்தான்குளமாலடிபற்றும்
ஆரணிக்குற்றாலர்தோட்டஞ்செய்நெடுஞ்செ
யபிஷேகப்பேரிக்கணக்கன்பற்றிலுஞ் (சாயினு)

ஈ. ஐயர்குற்றாலத்துநம்பியார் திருத்து
மப்பாலொருதாதன்குற்றாலப்பேரி
செய்யும்புலியூரிலஞ்சிமேலாகரஞ்
செங்கோட்டைசிவலநல்லூர்சிற்றம்பலம்
துய்யகுன்றக்குடிவாழவல்லான்குடி
காண்டையூர்முதலுட்கிடைசுற்றியே
கொய்யுமலர்தாரிலஞ்சிக்குமரர்
குருவிளையாடுந்திருவிளையாட்டத்தில்

சிங்கன்சொல்.

கொச்சகக்கலிப்பா.

கொட்டமுறுகூத்துடையார்குற்றாலநாதர்வெற்பில்
நெட்டமுறுவாள்விழியுநெற்றியின்மேற்கஸ்தூரிப்
பொட்டழகுங்காத்தழகும்பொன்னழகுமாய்நடந்த
கட்டழகிதன்னழகைக்கண்ணளவுங்கொள்ளாதே

தரு-இராகம்-கல்யாணி-ஆதிதாளம்.

பல்லவி.

மேயினுமைமையே டறவைகள்-மேயினுமைமையே

அநுபல்லவி.

மேயினுமைமயேகுற்றாலநாதர்வியன்குலசேகரப்பட்டிக்குளங்களும், ஆயிரப்பேரியுந்தென்காசியுஞ்சுற்றியயிலாயுந் தேளியுமாராலுங்கொத்திசாணங்கள். [யே.

க. ஆலயஞ்சூழத்திருப்பணியுங்கட்டியன்னசத்திரங்கட்டியப்பாலுந்தெ
ன்காசிப் பாலமுசங்கட்டிப்படித்தாஞ்சேர்கட்டிப் பத்தசனங்களைக்
காச்சத்துசங்கட்டி- மாலயன்போற்றியகுற்றாலநாதர்க்குவழித்தொ
ண்டுசெய்திடக்கச்சைசகட்டிக்கொண்ட- சீலன்கிளுவையில்சின்னஞ்
சேந்திரன்சிறுகாலசந்திதிருத்தப்புரமெல்லாம் (மேயினு)

உ. காணே தலைவன்வயித்தியப்பன்பெற்றசைவக்கொழுந்துசருமத்து
க்காலயஞ்-சேனைச்சவரிப்பெருமாள்சகோதரன்செல்வன்மருதூர்வ
யித்தியப்பனுடன்-மானவன்குற்றாலநாதனைப்பெற்றவன்வள்ளெல
னும்பிச்சைப்பிள்ளைத்திருத்தெல்லாங்-கானக்குளத்துள்வாய்கீழை
ப்புதுக்குளங்கற்பூரகாற்பற்றுந்தாட்டான்குளஞ்சுற்றம் (மேயினு)

௩. மன்னன்கிளுவையிற்சின்னணஞ்சேந்திரன் வடகரைவீட்டுக்குமந்
திரியாகவும்-செந்நெல்மருதூர்க்குநாயகமாகவுந்தென்காசியூருக்குத்
தாயகமாகவும் - தன்னைவளர்க்கின்றகுற்றாலநாதர்தலத்தைவளர்க்கி
ன்றதானிகனுகவும்-நன்னகர்குற்றாலத்தந்தாதிசொன்னவன் நண்ணு
ர்தொழும்பிச்சைப்பிள்ளைத்திருத்தெல்லாம் (மேயினு)

௪. நன்னகரூர்கட்டிச்சாலைமடங்கட்டிநாயகர்கோவிற்கொலுமண்டபங்
கட்டி-தென்னமரம்பராமானந்தத்தோப்பிட்டுநெய்பற்குளங்கட்டி

த்தேர்மண் டபங்கட்டிப்-பன்னுந்திரிகூடத்தம்பலங்கட்டிப்பசும்பொ
ன்கோடித்திருப்பணியுங்கட்டி-யுந்நாளில்தர்மங்களுஞ்செயங்கட்டுமெ
னந்தபத்மநாபன்கட்டளைப்பற்றெல்லாம் (மேயிறு)

௫. தந்தைமுன்கட்டினவம்பலத்துக்குஞ்சன்மதிதுக்கும் நிலைக்கண்ணா
டிபோலவே - எந்தையார்வாசலிற்பிள்ளையார்செய்வித்திரண்டுகுறி
ஞ்சிப்படித்துறையுஞ்செய்த - கொந்தார்புயத்தாலிராக்கதம்பெரு
மாள் குற்றாலநாதன்முன்னூற்றுசகோதரன் - வஞ்சனைசேர்சங்குமுத்
துதன்மைத்துன்மன்னன்வயித்தியநாதன்திருத்தெல்லாம் (மே)

௬. ஆர்மேல்வருகின்ற தன்பமுநீங்கிடட்சார்குறும்புமடக்கியேதென்
காசி - யூர்மேலுயர்ந்தமனுநீதிநாட்டியுடையவர் குற்றாலர்பூசைநை
வேத்தியம்-சேர்மேற்றிருநாளுந்தெப்பத்திருநாளும்சித்திரமண்ட
பஞ்சத்திரசாலையும் - பார்மேல்வளஞ்செயனந்தபத்மநாபன்பால
ன்வயித்தியநாதன்திருத்தெல்லாம் (மேயிறு)

௭. ஆறையழகப்பூபாலன்கட்டளையன்பன் திருமலைக்கொழுந்துதன்
கட்டளை, நாறம்புகுற்றாலச்சங்குதன்கட்டளைநங்களொல்லாரிநாரபா
லன்கட்டளை, வீறுசேர்பால்வண்ணச் சந்துதன்கட்டளை மிக்கான
வேமாமனூர்கிருஷ்ணன்வணிகேசன்-பேறுடையன்பன்வருசங்குமு
த்துதன்மேபானகட்டளைச்சிறானபற்றெல்லாம் (மேயிறு)

௮. தானிகன்சர்க்கரைப்பண்டாரமென்னுந்தணியாதகாதற்பணிவிடை
செய்கின்ற - மேன்மைபெறுஞ்சுந்தரத்தோழன்கட்டளைமிக்ககரு
வைப்பதிராம்நாயகன்- நாவிலபும்புகழ்தாசநதீர்த்தானுடலவ்லூர்
வருசங்கரமூர்த்திகட்டளை- ஆனைசடைத்தம்பிரான்பிச்சைசட்டளைய
ப்பால்மலைநாட்டார்கட்டளைப்பற்றெல்லாம் (மேயிறு)

சிங்கன் சொல்-கொச்சகக்கலிப்பா.

செட்டிக்கிரங்கிவினைதீர்த்தவர்குற்றாலர்வெற்பில்
கட்டிக்கிணைகுறுதற்சுந்தரியாள்கொங்கையின்மேல்
முட்டிக்கிடந்துகொஞ்சிமுத்தாடிக்கூடிநன்றாய்க்
கட்டிக்கிடக்குமுலைக்கச்சாய்க்கிடந்திலனே

தரு-இராகம்-கல்யாணி-தாளம்-சாப்பு.

பல்லவி.

கண்ணிகொண்டுவாடா-குளுவா-கண்ணிகொண்டுவாடா

அநுபல்லவி

கண்ணிகொண்டுவாடாபணைவர்குற்றாலர்
காரார்திரிகூடச்சாரலிலேவந்து
பண்ணியபுண்ணியமேதிரள்போலே
பறவைகளெல்லாம்பறந்திறங்குது (கண்ணி)

சரணங்கள்.

மானவர்சூழுமதுரையிற்பாண்டியன்
மந்திரியார்கையின்முந்திப்பணம்போட்டுத்

தானாசைப்பட்டுமுன்கொண்டகொக்கெல்லாந்
நரிகொண்டதில்லை நரிகொண்டுபோச்சுது
கானவர்வேட்டைதனையென்றெண்ணாதே
காக்கைபடுத்தகருமுகில்வண்ணனும்
மேனாட்படுத்திட்டகொக்கிறகின்னும்
விடைமேலிருப்பார்சடைமேலிருக்குது (கண்ணி)

௨. முன்னாள்படுத்தபரும்பெருச்சாளியை
மூத்தநயினார்மொடுவாய்க்கொடுப்பானார்
பின்னைத்தம்பியாராடுமயிலையும்
பிள்ளைக்குறும்பாற்பிடித்துக்கொண்டேகினார்
பன்னருமன்னத்தைநன்னகரீசர்
பரிகலமீந்திடும்பார்ப்பானுக்கீந்தனர்
வன்னபருந்தொருகள்வன்கொடுபோனான்
வக்காவுநாரையுங்கொக்கும்படுக்கவே (கண்ணி)

௩. மீறுமிலஞ்சிக்குறத்தியைக்கொண்டசெவ்
வேட்குறவன்முதல்வேட்டைக்குப்போனநாள்
ஆறுநாட்கூடியொருகொக்குப்பட்ட
தகப்பட்டகொக்கையவித்தொருசட்டியில்
சாறுகவைத்தபின்வேதப்பிராமணர்
தாமுங்கொண்டார்சைவர்தாமுங்கொண்டார்தவப்
பேருமுனிவருமேற்றுக்கொண்டாரினிப்
பிறகுச்சொல்லாமலேகொக்குப்படுக்கவே (கண்ணி)

கலிக்கூற்று-கொச்சகக்கலிப்பா.

ஆனைகுத்திச்சாய்த்ததிறலாளர்திருக்குற்றாலர்
கூனிகொத்திமுக்கிவிக்கிக்கொக்கிருக்கும்பண்ணையெல்லாம்
சேனைபெற்றவாட்காரச்சிங்கனுக்குக்கண்ணிகொண்டு
பூனைகுத்திநூவன்முழுப்பூனையைப்போல்வந்தானே.

நூவன்-சொல்லுதல்.

இராகம்-காம்போதி-சாப்புதாளம்.

கண்ணிகள்.

கலந்தகண்ணியைநெருங்கிக்குத்தினால்காக்காயும்படுமே-குளுவா
காக்காயும்படுமே
மலர்ந்தகண்ணியைக்கவிழ்த்துக்குத்தினால்வக்காவும்படுமே-குளுவா
வக்காவும்படுமே
உலர்ந்தகண்ணியையிறுக்கிக்குத்தினாலுள்ளானும்படுமே-குளுவா
உள்ளானும்படுமே
குலந்தகண்ணியைத்திருத்திக்குத்தடாகுற்றாலமலைமேல்-குளுவா
குற்றாலமலைமேல்

சிங்கன் சொல்-கொச்சகக்கலிப்பா.

கள்ளுலவுகொன்றையந்தார்க்கர்த்தர்திரிகூடவெற்பில்
பிள்ளைமதிவாணுதலார்பேசாதவிடங்கத்
துள்ளிமடிமேலிருந்துதோளின்மேலேறியவள்
கிள்ளிமொழிகேட்கவொருகிள்ளைபடாமனிலே

தரு-இராகம்-கல்யாணி ஆதிதாளம்,

பல்லவி.

கெம்பாறடையே-பொறுபொறு-கெம்பாறடையே.

அநுபல்லவி.

கெம்பாறடையேநம்பர்குற்றாலர்
கிருபைப்புரவில்பறவையடிக்கவே
பம்பாகவந்தவன்சத்தத்தைக்கேட்டல்லோ
வந்தகுருவிகலைந்தோடிப்போகுது. (கெம்பா)

சரணங்கள்.

௧. எறுதமீன்களுமேறிவருகுது
எத்திசைப்பட்டகுருகும்வருகுது
நூறுமுகண்ணியைப்பெருக்கக்குத்தியே
நூவனுநாலுமிருந்தேமுனைக்கினி
பேறானகுளமருந்தாகிலும்பிறர்
பேசாமல்வாடைப்பொடியாகிலுமனாக்
கூறாகிலுமொருபங்காகிலுமொரு
கொக்காகிலும்நரிக்கொம்பாகிலுந்தாரேன். (கெம்பா)

௨. பூசியுடுத்துமுடித்துவளையிட்டுப்
பொட்டிட்டுமையிட்டுப்பொன்னிட்டுப்பூவிட்டுக்
காசுபறித்திடும்வேசையராசாரக்
கண்ணிக்குள்ளேபடுங்காமுகர்போலவும்
ஆசாரவீனத்துலுக்கன்குதிரை
யடியொட்டிப்பாறையடியொட்டினாற்போலுந்
தேசத்துக்கொக்கெல்லாங்கண்ணிக்குள்ளேவந்து
சிக்குதுபார்கறிதக்குதுபாரிணிக் (கெம்பா)

௩. ஆலாவுங்கொக்குமருங்கேவருகுது
ஆசாரக்கள்ளர்போல்நாரைதிரிகுது
வேலான்கண்ணியாசையிலற்கீழ்.
மேலுந்திரிந்திடும்வேடிக்கைக்காரர்போல்
காலால்திரிந்துதிரிந்துதிரிந்தெங்கள்
கண்ணிக்குள்ளாகும்பறவையைப்போகட்டுப்
பாலாறுநெய்யாறுபாய்கின்றநாட்டத்திற்
பல்லொடிக்கச்சிறுகல்லடிப்பட்டாற்போல். (கெம்பா)

கவிக்கூற்று.

(ஆசிரியவிருத்தம்.)

தேவிகுழல்வாய்மொழிப்பேர்நாச்சியார்கால் செண்பகக்காலதி
ருந்தா( திருகுடிஞர்கால்- காவியல்வெண்ணமடைசட்டான் ( ற்றுக்கள்ளி
க்குளமழகர்பள்ளன்கூற்று, வாவிதொழுநின்றுசிங்கன்வேட்டையாடிவ
ருவியாறுமூக்கால்வட்டக்கால்தென்கால். கோவில்விளையாட்டமெனக்குங்க
ண்ணிகுத்திக்கூவினுலவனைவிட்டேவிருந்தேன்.

சிங்கன் சொல்லுதல்.

இராகம்-தர்பார்- சாபுதாளம்.

கண்ணிகள்.

க. கல்வித்தமிழ்க்குரியார்திரிகூடநாதர்கீர்த்தர்பொற்றாள்பாவுஞ்
செல்வக்கடலனையான்குற்றாலச்சிவராமநம்பியெனுங்கோன்
வல்லமணியபட்டன்பெருமைவளர்சங்குமுத்துநம்பி
வெல்லுங்குற்றாலநம்பிபுரவெல்லாமீன்கொத்திக்கூட்டமையே.

உ. சீராளன்பிச்சபிள்ளைதிருப்பணிசெல்வப்புதுக்குளமும்
காராளன்சங்குமுத்துத்திருத்தொடைக்காங்கேயன்கட்டளையும்
வெகுமாராஜன்தென்குடிகைவைத்தியநாதன்புதுக்குளமும்
தாராளமானபுள்ளும்வெள்ளன்னமுந்தாராவுமேவுதையே.

ங. தானக்கணக்குடனேஸ்ரீபண்டாரந்தன்மடத்தர்கணக்கும்
வானவர்குற்றாலர்திருவாசம்மாடநற்பத்தியமும்
நானிதழ்சூழ்குடிகைவைத்தியநாதனர்பாலன்
தானபிமானம்வைத்தசிவராமன்சம்பிரதிகணக்கும்.

ச வேதநாராயணவேள்குமாரன்விசைத்தொண்டநாடாளன்
சிதரன்முத்துமன்னன்விசாரிப்பச்சேர்ந்தபுரவினெல்லாம்
காவலாய்க்கண்ணிவைத்துப்பறவைக்குக்கங்கணங்கட்டிநின்றே
னேதோவொருபறவைதொடர்ந்துவந்தென்னைக்கடிக்குதையே,

சிங்கன்-சிங்கியை- நினைத்துக்கொள்ளுதல். விருத்தம்.

காவலர்திரிகூடத்திற்காதலாற்கலங்கிவந்த
நூவலனைப்பழித்துச்சிங்கனுக்கியேவேட்டைகாட்டி
லாவல்சேர்காமவேட்டையாசையாலன்னப்பேட்டைச்
சேவல்போய்ப்புணரக்கண்டான்சிங்கிமேற்பிரமைகொண்டான்.

சிங்கியை நினைத்துப்- புலம்பல்,

இ-ம்-ஆகிரி-சாப்புதாளம்.

கண்ணிகள்.

எட்டுக்குரலிலொருகுரல்கூவும்
ஏகாந்தச்சிங்கியைக்கூவாததென்ன
மட்டார்குழலிதன்சாடைகாட்டி
மார்பிலெழுந்தழுகலையுங்காட்டிய

புறவே - யென
குலாவே
மயூரமே - யவள்
சாயமே

௩. தட்டொத்தகும்பத்தடமுலைகட்டுஞ் சகோரமே - சற்று
தண்ணென்றும்வெச்சென்றுங்காட்டிவிட்டானுபகாரமே
௪. சுட்டிதிரவியக்கண்போலுநன்னைகர்க் காவியே-கண்ணிற்
கண்டிடமெல்லாமவளாகப்போற்றுது பாவியே

சிந்துகண்சொல்-கொச்சகக்கலிப்பா

செட்டிபத்திற்கண்ணிவைத்தேன் சிக்கிநடைச்சாயலினாற்
பெட்டைகுளத்திலன்னப்பேடைநடைபார்த்திருந்தேன்
கட்டுற்றநன்னைகர்களெங்கண்ணியெல்லாஞ்சொற்றிவெற்றிக்
கொட்டிக்கொண்டையேகுருவியெல்லாம்போயினுமே.

தரு இராகம்-முகாரி- சாப்புதாளம்.

பல்லவி.

போயினுமையே-பறவைகள்- போயினுமை.

அநுபல்லவி.

போயினுமையேநாயகர்குற்றால்
பொல்லாதசக்கன்மதனடைபுரிந்தநாள்
வாயிலடிபடடிடிபட்டுதைபட்டு
வானவர்தானவர்போனதுபோலவே (போயினு)

சரணங்கள்.

௧. மேடையினின்றொருபஞ்சவர்ணக்கிளி
யின்றார்கைதடவியென்றுமின்றுகைநந்தது
பேடைபெண்ணேயுகைச்செவல்தொடர்ந்தது
பின்பெருச்சேவலுங்கூடத்தொடர்ந்தது
குடியவின்பயிரண்டுக்குமெட்டாமற்
சந்தோஷகநகர்வந்தகலாபத்திற்
காடெல்லாம்பட்சியாய்க்கூடியுளம்பாடிக்
கண்ணியுந்தட்டிடென்கண்ணிலுங்கட்டியே (போயினு)

௨. ஆயிரங்கொக்குக்குக்கண்ணியைவைத்துநா
ளைப்பாலேபோயொருமிப்பாயிருக்கையில்
ஆயிரங்காகங்களாயிரம்பட்டு
மறைத்துவிரைத்துக்கிடப்பதுபோலவே
காயமொட்டுங்கிடந்ததுகண்டுதான்
கண்ணிகழற்றிநிலத்திலேவைத்தபின்
சேயிழைதலைபொருட்டாலேபஞ்சாட்சரஞ்
சேவிததமன்னவன்பாவம்போனாப்போலே(போயினு)

௩. தம்பமெனநேரநம்பினோனாச்சரியண்ணி
தான்வாழப்பார்ப்பவர்செல்வங்கள்போலவும்
பம்புங்வடபாலருவியிற்றோய்ந்தவர்
பாவங்கழுந்நாய்ப்போவதுபோலவும்

கும்பமுனிக்குச்சிவயானைகாலங்
குறித்தோடிப்போனவவனைவர்போலவும்
அம்பிகைபாகந்திரிகூடநாத
ரடியவர்மேல்வந்ததுன்பம்போனாற்போலே (போயினு)

நூவன் - சிங்கனைப்பழித்தல்.

விருத்தம்.

வருக்கையார்திரிகூடத்தின்மாமிமேற்கையும்வேலிப்
பருத்திமேற்கண்ணுமானபாவைபோல்வேட்டைபோனாய்க்
கருத்துவேறாய்த்தாயைக்கற்பித்தமகள்போலென்னைச்
சிரித்தனைசிங்காவுன்னைச்சிரித்ததுகாமப்பேயே.

இதுவும்- நூவன்சொல்லுதல்

விருத்தம்.

கடுக்கையார்திரிகூடத்திற்காமத்தால்வாமக்கள்ளைக்
குடித்தவர்போலேவீழ்ந்தாய்கொக்குநீபடித்துவாழ்ந்தாய்
அடிக்கொருநினைவேன்சிங்காவாசைப்பேயுனைவிடாது
செடிக்கொருவலையும்போட்டுச்சிங்கியைத்தேடுவாயே.

சிங்கன்- நூவனுக்குச்சொல்லுதல்.

விருத்தம்.

வேடுக்கள்ளியோர்நாண்மெய்யிலாதவனேயென்னை
ஊடலிற்சொன்னபேச்சாலுருவிலிபகைத்தானென்மேற்
போடுவான்புட்பபாணம்புறப்படமாட்டேநூவா
சேடநீதிரிகூடத்திற்சிங்கியைத்தேடுவாயே.

நூவன்சொல்- விருத்தம்.

அங்சணர்திரிகூடத்திலவளைநீயணைந்தாலென்ன
நுங்கள்ற்பிரிந்தாலென்ன நூவனுக்குண்டோநட்டம்
தங்கணமெனக்கேன்சிங்காகாசிலையுனக்குண்டானாற்
கொங்கணைச்சிங்கிதன்னைக்கூட்டிவாகாட்டுவேனே.

தலங்கள்- தேடிப்போன.

விருத்தம்.

திருவணாமலைகாஞ்சிதிருக்காளத்திசீர்காழிசிதம்பரந்தென்னாரூர்
காசி, குருநாடுகேதாரங்கோலகொண்டைகோகரணஞ்செகநாதங்கும்ப
கோணம், ஆரியனூர்சிரகந்திருவானைக்காவடங்கலும்போய்ச்சிங்கிதனை
த்தேடிச்சிங்கன், வருசிராப்பள்ளிவிட்டுமதுரைதேடிமதிகொண்டான்
திரிகூடமெதிர்கண்டானே.

வில்லிபுத்தூர்கருவைநல்லூர்புன்னைக்காவுவேள் திருச்செந்தூர்கு
ருகூர்ஸ்ரீவைகுந்த - நெல்வேலிசிங்கிகுளந்தேவநல்லூர் நிலைதருச்சிற்

றூர்குமரி திருவாங்கோடு, சொல்லரிய குருங்கைகளக்காடு தேடித் தொண்டை மருதூர்த் தாவ நல்லூர் தேடிச், செல்வருந்துறை சிவசைலம் பாவநாசந்திரி கூடச் சிங்கிதனைத் தேடுவானே.

சிங்கன்-சொல்லுதல்.

இராகம்-நீலாம்புரி-ஆதிதாளம்.

கண்ணிகள்.

க. பேடைக்குயிலுக்குக் கண்ணியை வைத்து நான் மாடப்புறாவுக்குப் போனேன், மாடப்புறாவுங் குயிலும் பட்டதேன் வேடிக்கைச் சிங்கியைக் காணேன்.

உ. கோலமயிலுக்குக் கண்ணியை வைத்து தானுலாப்படுக்கவே போனேன், ஆலாவுங் கோலமயிலும் பட்டதேன் மாலான சிங்கியைக் காணேன்

ங. வவ்வாற்பறவையின் வேட்டைக்குப் போய்க் காம வெவ்வேட்டைதப் பிவிட்டேன்-வவ்வால் படுக்க மரநாயகப் பட்டவை போகமாச்சுதுதானே.

௪ இவ்வாறு வந்தவென் வெஞ்சில் விகாரத்தை யெவ்வாறு தீர்த்துக்கொள்வேனே, செவ்வாய்க் கரும்பையபூராக வஞ்சியை சிங்கியைக் காணுகிலேனே.

குற்றாலத்தில் சிங்கன்- சிங்கியைத் தேடுதல்.

விருத்தம்.

நற்றாலந்தன்னிலுள்ளோர் யாவரோனு நன்னகரத் தலத்தில் வந்து பெறுவார் பேறு, பெற்றோர்தா நன்னகரத் தலந்தனை விட்டாற் பிரமலோகம் வரைக்கும் பேறுண்டாமோ, வற்றாத வடவருவிச் சாரலீங்கி வடகாசி குடிமட்டு பேலந்த சிங்கன், குற்றாலத்தலத்தின் முன்னே தவத்தால் வந்து கூடினான் சிங்கிதனைத் தேடினானே.

சிங்கியைக் காணமற் புலம்பல்.

தரு-இராகம்-தோடி-ஆதிதாளம்

பல்லவி.

சிங்கியைக் காணேனே- யென் வங்கணச் - சிங்கியைக் காணேனே

அநுபல்லவி.

சிங்கியைக் காமப்பசுங்கிளிப் பேடையைச்
சீர்வளர் குற்றாலர் பேர்வளம் பாடிய
சங்கீதவாரியை யிங்கித நாரியை
சல்லாபக்காரியை யுல்லாசமோகன (சிங்கியைக்)

சரணங்கள்.

க. ஆரத்தனத்தைப் படங்கொண்டு மூடியசைத்து நின்றாளதை யானைக் கொம்பென்றே- கோரத்தை வைத்த விழிக்கெதிர் சென்றேன் கொஞ்சத்தனத்தையதிந்து சக்காதி பாரத்தனத்தைத் திறந்து விட்டாள்க

ண்போலியலுமிமறந்துவிட்டேனுடன் - நிரக்கனியமயக்கிமுயக்கி
பேசிங்காரமோ கனச்சிங்கிகொண்டாளந்த (சிங்கி)

௨. பூவென்றபாதம்வருடிவருடிப்புளகமுலையைநெருடிநெருடியேவென்
றகண்ணுக்கோரஞ்சனந்திட்டிபெடுத்துச்சாறூனாயிதழாலிடுக்குவள்
வாவென்றுகைச்சுருள்தானெனக்கீந்தநாளுமக்குறிகல்லுறக்குதிலை
த்தபின், ஞவென்றொருக்காலுமைப்பளதுக்குக் கிடந்துகொதிக்கு
தென்பேயமனம் (சிங்கி)

௩. தாராங்குன்றிவடத்தையொதுக்கித்தடமார்பிறுகத்தழுவவந்தால
வள், வாராப்புங்கொங்கைக்குச்சந்தனம்பூசாள் மறுத்துநான்பூசினு
ம்பூசலாகாதென்பள்-சீராடிக்கூடிவிளையாடிப்பிட்டுத் தீராமயல்தந்
ததீராண்மைக்காரியைக், காரங்கண்டார்தென்றுட்டுறை காரிகைப்
பூவையையாரிய்ப்பாவையைச் (சிங்கி)

நூவன்-வினவுதல்

கொச்சகக்கலிப்பா.

சங்கமெல்லாமுத்தீனுஞ்சங்கர்திரிகூடவெற்பிற்
பொங்கமெல்லாஞ்செய்யுமுங்கள்பொங்கமெல்லாம்யாரறிவார்
சிங்கமெல்லாமொத்தகுடிசிங்காவுன்சிங்கிதனைக்
அங்கமெலாஞ்சொல்லியடையாளஞ்சொல்வாயே

தரு-இராகம்-பியாகடை-மிசுரதாளம்.

பல்லவி.

கறுப்பிலழகியடா- காமச்

அநுபல்லவி.

சுறுக்கிலழகிசிங்கி சுயம்காதி (கறுப்பி)

சரணங்கள்.

௧. கண்களிரண்டுமேம்புக்கணைபோலநீண்டிருக்கும்
கையத்தனையகலங்காணுமடா
பெண்கள்மயங்குமவள்விரகப்பார்வை
சிங்கிபிடித்தால்மதப்பயலும்பெலப்பானே (கறுப்பி)

௨. நகையுமுகமுமவள்நாணையக்கைவீச்சும்
பகைவரும்பிரிந்துபார்ப்பாரடா
தொகையாச்சொன்னேனினிச்சொல்லக்கூடாதொரு
வகையாய்வருகுதென்னைமயக்குதையேஐயே (கறுப்)

௩. விடையில்வரும்பவனியுடையர்திருக்குற்றாலர்
சடையிலிளம்பிறைபோல்தனிநுதலாள்
நடையிலழகுமிருதுடையிலழகுமவ
ளுடையிலழகுமென்னையுருக்குதையேஐயே (கறுப்)

கொச்சகக்கலிப்பா.

சாட்டிநிற்குமண்டமெல்லாஞ்சாட்டியில்லாப்பம்பரம்போ
லாட்டுவிக்குங்குற்றாலத்தண்ணலார்நன்னாட்டில்
காட்டுவிக்குமுன்மோசக்கண்மாயச்சிங்கிதனைக்
கூட்டிவைக்கும்பேர்களுக்குக்கூலியென்னசொல்வாயே

இராகம் தர்பார் ரூபகதாளம்.

கண்ணிகள்.

க. வாடைமருந்துப்பொடியும் அம்பியூர
மரப்பாவைபின்றொடரமாயப்பொடியும்

உ. கூடியிருக்கமருந்தும் இருபொழுதுங்
கூடியிருப்பார்களைக்கலைக்கமருந்தும்

ங. காடுகட்டக்கிளிக்கட்டும் குறளிவித்தை
கண்கட்டுவித்தைகளுங்காட்டித்தருவேன்

ச. வேடிக்கைக்காமாதிபோல் திரிகூட
வெற்பிலுலாசிங்கிதனைக்காட்டாயையே

ரு. மலையைச்சாயப்பண்ணுவேன் குமரிகட்கு
வாராதமுலைகளும்வரப்பண்ணுவேன்

சா. மூலையையொளிக்கப்பண்ணுவேன் ஒளித்தபேரா
மோகினிமந்திரஞ்சொல்லிவரப்பண்ணுவேன்

எ. திலதசிரசஞ்செய்வேன் ஒருவருக்குந்
தெரியாமற்போகவரச்சித்துமறிவேன்

அ. கலகமானப்பயலை யென்மீதிற்கண்
காட்டிவிட்டசிங்கிதனைக்காட்டாயையே

நூவன் சொல்லுதல்.

கொச்சகக்கலிப்பா.

ஆற்றைநான்கடத்திவிட்டாலாகாசமார்க்கமோடத்
தெற்றநீயதிவாயல்லோதிரிகூடமலையிற்சிங்கா
சாற்றுமூனமருந்துபோலச்சகலர்க்குங்குறிகள்சொல்லி
போற்றுமுன்சிங்கிபோனபுதுத்தெருவிதுகண்டாயே

சிங்கன்-சிங்கியைக்காணமல்-வருந்தல்,

தரு இராகம்-மூகாரி-ஆதிதாளம்.

பல்லவி.

எங்கேதான்போனளோ-என்சிங்கியிப்போ
எங்கேதான்போனளோ

அநுபல்லவி.

தங்காளர்திரிகூடர்கர்த்தர்திருநாடுதனில் (எங்கே)

சரணங்கள்.

க. வேளாகிலுமயக்குவள்-உலியதட்டிக்
கேளாமலுமுயக்குவள்
ஆளாயழகனுமாயானையெங்கேகண்டாளோ
தோளாசைக்காரிசிங்கிசும்மாகிடக்கபாட்டாள் (எங்கே)

உ. மெய்க்குறியாலெக்கும்வெல்லுவள்-மனக்குறியுங்
கைக்குறியுங்கண்டுசொல்லுவள்
திக்கிலடங்காதகுறியிக்குளடங்காதமொழி
மைக்குளடங்காதவிழிகைக்குளடங்காதகள்ளி (எங்கே)

ங. சித்திரச்சபேசர்மேலே-சிவசமயப்
பத்தியில்லாப்பேயர்போலே
குற்றியிலாக்குங்கள்ருங்குடிலைவயிற்றெண்ணங்களும்
அத்தனையுக்குடிக்குப்போட்டார்பிறகேதொடர்ந்தாளோ.

சிங்கியெதிர்ப்படுதல்,

விருத்தம்.

சீதமதிபுனைந்த குற்றாலநாதர் திருநாட்டி லிருவருந்தாங்கண்ட போதே,காதலெனுங்கடல்பெருகித்தரிகொள்ளாமற்கைகலக்கும்போதுவலைதுழக்கிட்டாற்போல், வீதிவந்துகுறக்கிடவேநாணம்பூண்டவிண்ணுணைச்சிங்கிதனைக்கண்டுசிங்கன், தாழவந்தநளனைநல்கன்னிமாடந்துலங்குதமயந்தியெனத்தோன்றினளே.

தரு-இராகம்-எதுகுலகாம்போதி-சாப்புதாளம்.

பல்லவி.

இங்கேவாராய் என்கண்ணே இங்கேவாராய்

அநுபல்லவி.

இங்கேவாராய்மலர்ச்செங்கைதாராய்-மோகச் சங்கைபாராய்
காமச்சிங்கியாரோ யிப்போ (இங்கே)

சரணங்கள்.

க. பாதம்நோமே-நொந்தால்-மனம்-பேதமாமே
பாகம்நோகநிற்பதேதுபாவமினிகூதலோகொடிதுகாதலோகடினம்(இ

உ. பாவிதானே-மதன்கணை-ஏவினானே
ல்மாங்குயில்கள்கூவிக்கூவி யெனதாவிசோருதுன்னையாவியாவி (இங்கே)

ங. வருக்கைசமூலர்-வடவருவித்-திருக்குற்றாலர்
பெருக்கம்பாடிக்கொள்ளமருக்கள்சூடிக்கொள்ள ஒருக்காலாடிக்கொள்ள இருக்காக்கூடிக்கொள்ள. (இங்கே)

## சிங்கன்-சிங்கியைக்கண்டு-மகிழ்தல்.

கொச்சகக்கலிப்பா.

தொண்டாகுஞ்சுந்தரர்க்குத்தோழர்திரிகூடவெற்பிற்
திண்டாடிநின்றசிங்கன்சீராடுஞ்சிங்கிதனைக்
கண்டாடித்துள்ளாடிக்கள்ளாடுந்தும்பியைப்போற்
கொண்டாடிக்கொண்டாடிக்கூத்தாடிக்கொண்டானே.

சிங்கனுக்குஞ் சிங்கிக்கும்- சம்வாதம்.

இராகம்-தன்னியாசி ஆதிதாளம்.

கண்ணிகள்.

சிங்கன் இத்தனைநாளாகவென்னுடன்சொல்லாமல்
எங்கேநடந்தாயடிசிங்கி — எங்கே

சிங்கி கொத்தார்குழலார்க்குவிஸ்தாரமாகக்
குறிசொல்லப்போனேனடாசிங்கா — குறிசொல்

சிங்கன் பார்க்கிலதிசயந்தோணுதுசொல்லப்
பயமாயிருக்குதடிசிங்கி — பய

சிங்கி ஆர்க்குப்பயமினித்தோணினகாரியம்
அஞ்சாமற்சொல்லடாசிங்கா — அஞ்ச

சிங்கன் காலுக்குமேலேபெரியவிரியன்
கடித்துக்கிடப்பானேன்சிங்கி — கடித்து

சிங்கி சேலத்துநாட்டிற்குறிசொல்லிப்பெற்ற
சிலம்புகிடக்குதடாசிங்கா — சிலம்ப

சிங்கன் சேலத்தாரிட்டசிலம்பிற்குமேலே
திருகுமுறுக்கென்னடிசிங்கி — திருகு

சிங்கி கோலத்துநாட்டார்முறுக்கிட்டதண்டை
கொடுத்தவரிசையடாசிங்கா — கொடு

சிங்கன் நீண்டுகுறுகியுந்நாங்கூழ்ப்போல
நெளிந்தநெளிவென்னடிசிங்கி — நெளிந்

சிங்கி பாண்டியனார்மகள்வேண்டுங்குறிக்காகப்
பாடகமிட்டதடாசிங்கா — பாட

சிங்கன் மாண்டதவளையுன்காலிலேகட்டிய
மார்க்கமதேதடிசிங்கி — மார்க்க

சிங்கி ஆண்டவர்குற்றாலர்சந்நிதிப்பெண்க
ளணிமணிக்கெச்சமடாசிங்கா — அணிமணி

சிங்கன் சுண்டுவிரல்தோறுங்குண்டலப்பூச்சி
சுருண்டுகிடப்பானேனடிசிங்கி — சுருண்

சிங்கி கண்டியேதேசத்திற்பண்டுநான்பெற்றது
காலாழிபீலியடா சிங்கா — காலாழி

சிங்கன் மெல்லியபூந்தொடைவாழைக்குருத்தை
விரித்தாப்படித்தவரார் சிங்கி — விரித்தா

சிங்கி நெல்வேலியார்தந்தசல்லாபச்சேலை
நெறிபிடித்ததுகொடுத்தார் சிங்கா — நெறிபி

சிங்கன் ஊருக்குமேற்கேயுயர்ந்தவரசிலே
சாணைப்பாம்பேதுபெண்ணே சிங்கி — சாணை

சிங்கி சீர்பெற்றசோழன்குமாரத்தியார்தந்த
செம்பொன்னரைஞாணடா சிங்கா — செம்பொ

சிங்கன் மார்பிற்குமேலேபுடைத்தசிலந்தியில்
கொப்புளங்கொள்வானேன் சிங்கி — கொப்பு

சிங்கி பாருக்குள்ளேற்றமாயக்காயங்குளத்தார்தந்த
பாசமுகத்தாரடா சிங்கா — பாசமு

சிங்கன் ஆகாவடமெல்லாமங்ஙனேகூடவே
ஆவாரைபூத்ததடி சிங்கி — ஆவாரை

சிங்கி ஏகாவடமென்றுசீர்காழியாரெனக்
கிட்டவரிசையடா சிங்கா — இட்டவரி

சிங்கன் எட்டுப்பரவைகுழுறுங்கழுத்திலே
பத்தெட்டிப்பாம்பேதடி சிங்கி — பத்தெட்

சிங்கி குட்டத்துநாட்டாருங்காயங்குளத்தாரும்
இட்டசவளியடா சிங்கா — இட்டச

மேற்படி-வேறு.

இராகம்-புன்னாகவராளி- ஆதிதாளம்.

கண்ணிகள்.

ங்கன் வள்ளிக்கொடியிலேதுத்திப்பூப்பூப்பானேன் — சிங்கி
ங்கி காதில்-வங்காளத்தாரிட்டசிங்காரக்கொப்படா — சிங்கா
ங்கன் கள்ளிப்பூப்பதி-யமல்லவோ — சிங்கி
ங்கி தெற்கு வள்ளியூரார்தந்தமாணிக்கத்தண்டொட்டடா — சிங்கா
ங்கன் வளைக்குமிழிமேலேபுன்னையரும்பேது — சிங்கி
ங்கி மண்ணில-முன்னீர்ச்சலாபத்துமுத்துமூக்குத்தி காண் — சிங்கா
ங்கன் சொருகிமுடித்ததில்தூக்கணமேதடி — சிங்கி
ங்கி மதன்-குருகையூரார்தந்தகுப்பியுந்தொங்கலும் — சிங்கா
ங்கன் விந்தையாய்மேலெல்லாமின்வெட்டியார்ப்பானேன் — சிங்கி
ங்கி இந்தவண்ணப்பணிகளின்மாணிக்கக்கல்லொளி — சிங்கா

சிங்கன் மூலையென்றுசொல்வதைமூடிக்கிடப்பானேன் சிங்கி
சிங்கி செஞ்சி-மலைமாதர்தந்ததுகில்வேடிக்கைக்காச்சடா சிங்கா
சிங்கன் மூடிக்கிடப்பவும்நாற்றங்குலைப்பானேன் சிங்கி
சிங்கி இது-ஆடித்திருத்தங்கால்வாடைப்பொடியடா சிங்கா
சிங்கன் அந்தப்பொடியால்மூலைவீக்கம்போகுமோ சிங்கி
சிங்கி வீக்கம்-ஆறுவதுக்கென்னபோறுவதுக்கென்ன சிங்கா
சிங்கன் இந்தப்பணியைநீபூணப்பொறுக்குமோ சிங்கி
சிங்கி புவி-ஈசர்க்குங்கற்றோர்க்குமெல்லாம்பொறுக்குங்காண் சிங்கா
சிங்கன் குல்லாவைசப்பியார்த்தால்கொடியிடைசாங்குமோ சிங்கி
சிங்கி தன்-கொடிக்குச்சுரைக்காய்கனத்துக்கிடக்குமோ சிங்கா
சிங்கன் இல்லாதசிறப்பெல்லாமெங்கேபடித்தாடி சிங்கி
சிங்கி நாட்டில்-நல்லவைக்கண்டாருக்கெல்லாம்வருமடா சிங்கா
சிங்கன் பெட்டகப்பாம்பைப்பிடித்தாட்டவேண்டாமோ சிங்கி
சிங்கி இந்த-வெட்டவெளியிலேகொடிப்பாம்பாடுமோ. சிங்கா
சிங்கன் கட்டிக்கொண்டேசற்றேமுத்தங்கொடுக்கவோ சிங்கி
சிங்கி தடுப்-பட்டப்பகலில்நாணைவிட்டுக்கொடுப்பேனோ சிங்கா
சிங்கன் மூட்டப்படாமுலையாணையைமூட்டவோ சிங்கி
சிங்கி காமம்-மட்டுப்படாவிட்டால்மனைக்கோடேமுட்டடா சிங்கா
சிங்கன் சேலையுடைதன்னைச்சற்றேநெகிழ்க்கவோ சிங்கி
சிங்கி சும்மா-நாலுபேர்முன்னென்னைநாணங்கெடுக்காதே சிங்கா
சிங்கன் பாகுவருடிக்கூனைக்குத்தவேண்டாமோ சிங்கி
சிங்கி பணம்-போகவருடிப்போய்ப்பூனையைக்குத்தடா சிங்கா
சிங்கன் நாக்குநவுடிக்குதுநல்வாயிதழுக்கு சிங்கி
சிங்கி உன்றன்-வாய்க்குருப்பதுமாலைக்கள்ளல்லவோ சிங்கா
சிங்கன் ஒக்கப்படுக்கவொருவிடம்பார்க்கவோ சிங்கி
சிங்கி பருவங்கொக்குப்படுக்கக்குறியிடப்பாரடா சிங்கா
சிங்கன் வித்தைக்காரியுன்னைவெல்லக்கூடாதடி சிங்கி
சிங்கி அது-சந்தேகமோவுன்றலைப்பேனைக்கேளடா சிங்கா
சிங்கன் தென்னாடெல்லாமுன்னைத்தேடித்திரிந்தேனே சிங்கி
சிங்கி அப்பா இந்நாட்டில்வந்தென்னையெப்படிநீகண்டாய் சிங்கா
சிங்கன் நன்னகர்குற்றாலநாதனைவேண்டினேன் சிங்கி
சிங்கி மணிப்-பன்னகம்பூண்டாரைப்பாடிக்கொண்டாடுவோம் சிங்கா

உ

கடவுள் துணை.

திருக்

# குற்றாலக்குறவஞ்சி.

இவை

தமிழ்ப்புலவராகிய

புதுவை

நயனப்ப முதலியாரால்

முன்பதிப்பித்தபிரதியைககொண்டு

ச. பி. சே. வகை

கருப்பணபிள்ளையவர்களால்

பூவிருந்தவல்லி,

சுந்தரமுதலியாரது,

சுந்தரவிலாச அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டது.

1889.

கடவுள்துணை.

# திருக்குற்றாலக்குறவஞ்சி.

## விநாயகர்துதி,

ஆசிரியவிருத்தம்.

பூமலியிதழிமாலை புனைந்தகுற்றாலத்தீசர்
கோமலர்ப்பாதம்போற்றிக் குறவஞ்சித்தமிழைப்பாட்
டாமகத்தருவிபாயு மலையெனவளர்ந்தமேனிக்
காமலிதருப்போலைந்து கைவலான்காவலானே,

## சுப்பிரமணியக்கடவுள்துதி,

ஆசிரியவிருத்தம்,

பன்னிருகைவேல்வாங்கப்பதினொருவர்படைதாங்கப்பத்துத்திக்கும்
நன்னவவீரரும்புகழ்மலைகளெட்டுங்கடலேழுநாடியாடப் (றாய்
பொன்னின்முடிபாறேந்தியஞ்சுதலை யெனக்கொழித்துப் புயனான்மூன்
கன்னிருகாடருமொருவன்குற்றாலக்குறவஞ்சித்தமிழ்தந்தானே,

## திரிகூடநாதர்துதி - ஆசிரியவிருத்தம்,

கிளைகளாய்க்கிளைத்தபலாக்கொம்பெலாஞ் சதுர்வேதக்கிளைகளீன்ற
சுளையெலாஞ்சிவலிங்கங் கனியெலாஞ்சிவலிங்ககனிகளீன்ற
சுளையெலாஞ்சிவலிங்கம் வித்தெலாஞ்சிவலிங்கச்சொரூபமாக [வேமே
விளைவுமொருகுறும்பலவின் முளைத்தெழுந்தசிவக்கொழுந்தைவேண்டு

## குழல்வாய்மொழியம்மைதுதி ஆசிரியவிருத்தம்,

தவளமதிதவழ்குடுமிப்பனிவரையின்முளைத்தெழுந்து தகைசேர்முக்க
பவளமலைதனிலாசைபடாதேறிக்கொழுந்துவிட்டுமபருவமாகி [ட்
புவிமுழுநறைப்பூங்கடப்பந்தாமரையுமீன்றொருகோட்டாம்பலீன்று (மே
ஆலயம்பூத்தருள்கொடியைக்கோதைகுழல்வாய்மொழியைக்கூறுவோ

## மூவர்துதி - ஆசிரியவிருத்தம்,

தலையிலேயாறிருக்கமாமிக்காகத்
தாங்குகடலேழுமழைத்த திருக்குற்றாலர்

சிலையிலேதடித்ததடம புயக்கைவாழ்த்[illegible]
செழித்தகுறவஞ்சிநாடகத்தைப்[illegible]
வலையிலேமலைமிதக்கவேறிஞனு
மத்தியிலே பூவையங்காளமைப்[illegible]தானுங்
கலையிலேகிடைத்தபொருளாற்றிற்[illegible]க்
கனகுவத்திலெடுத்தானுங் பாபத[illegible]




அகத்தியர் வாதவூரர்துதி - ஆசிரியவிருத்தம்,

சித்தர்திரிகூடலிங்கர்குறவஞ்சிநாடகத்தைநிகழ்த்தவேண்டி
முத்தாதிருமேனியெல்லா முருகவேதமிழ்ஞானக்குமுனியைப்பாடி
இத்தரையிலாததுமம்விட்டிறக்குநாட்சிலேட்டுமமவந்தேறுவண்ணம்
பித்தனடித்துணைசேர்ந்த வாதவூரனடிகள்பேணுவோமே,

சரஸ்வதிதுதி - ஆசிரியவிருத்தம்,

அடியிணைமலருஞ்செவ்வா யாம்பலுஞ்சிவப்பினளை
நெடியபூங்குழலுமைக்க ணீலமுற்கருப்பினளைப்
படிவமும்புகழுஞ்செங்கைப் படிகமபோல்வெளுப்பினளைக்
கொடிதனைத்திருக்குற்றாலக் குறவஞ்சிக்கியம்புவோமே.

நூற்பயன் - ஆசிரியவிருத்தம்.

சிலைபெரியவேடனுக்கு நரிக்கும்வேதச் செல்வருக்குந்தேவருக்
கிரங்கிமேனாட், கொலைகளவுகட்காமங் குருத்துரோகங் கொடிய பஞ்
சபாதகமுந் தீர்த்ததாலே, நிலவணிவார்குற்றால நினைத்தபேர்க ணினை
த்தவரம்பெறுவரது நினைக்கவேண்டிப், பலவளஞ்சேர் குறவஞ்சி நாடக
கத்தைப் படிப்பவர்க்குங் கேட்டவர்க்கும் பலனுண்டாமே.

[illegible]சம் - ஆசிரியவிருத்தம்,

தாரிணைவிருப்பமாகத் தலைதனில[illegible],
நாரிணைப்பொல்லாதென்றே ஞாலத்தோர்தள்ளுவாரோ
சீரியதமிழ்மாலைக்குட் செல்வர்குற்றாலநாதர்
பேரினாலெனதுசொலலைப் பெரியவர்தள்ளார்தாமே.

கட்டியக்காரன்வருகிற விருத்தம்,

தேர்கொண்டவசந்தவீதிச் செலவர்குற்றாலத்தீசர்
பார்கொண்டவிடையிலேறும் பவனியெச்சரிக்கைகூற
சேர்கொண்டபுரிநூன்மார்பு நெடியகைப்பிரம்புமாகக்
கார்கொண்டமுகிலேதென்னக் கட்டியக்காரன்வந்தான்

இ-ம்-தோடி-தாளம்-சாப்பு - கண்ணிகள்,

பூமேவுமனுவேந்தர் தேவேந்தர்முதலோரைப்
புரந்திடுஞ்செங்கோலான பிரம்புடையான்
மாமேருச்சிலையாளர் வீரதர்குற்றாலநாதர்
வாசற்கட்டியக்காரன் வந்தனனே.

கட்டியக்காரன்சொல் - விருத்தம்,

மகெழுந்தமுத்துடையாரணிவருக்கைநன்னகரமூதூர்வீதி
ரக்கெழுந்தகுறுமுனிக்காய் மறியெழுந்தகரங்காட்டும்வள்ளலாசீர்த்
தக்கெழுந்தமறைநான்குஞ்சிலம்பெழுந்தபாதர்விடைச்சிலம்பிலேறி
மக்கெழுந்தமதிசூடிக்கிழக்கெழுந்த ஞாயிறுபோல்மேவினாரே,

திரிகூடநாதர் பவனிவருதல்,

தரு-இராகம்-பந்துவராளி-தாளம்-சாப்பு,

பல்லவி,

பவனிவந்தனரே - மழவிடை - பவனிவந்தனரே

அநுபல்லவி,

னிபோற்றியகுறும்பலாவுறை மவுனநாயகரெவனநாயகர்
வனுமாயரியபனுமானவர் கவனமால்விடையதனிலே (பவனி)

சரணங்கள்,

அண்டர்கூட்டமுமுனிவர்கூட்டமு மசுரர்கூட்டமுமனிதராகிய
ரண்டர்கூட்டமுமிமைப்பிலாரெனச் சூழ்ந்துதனித்தனிமயங்கவே
ஞடைநாரிவர்தேவரிவரெனப் பகுத்துசிறுவியவேலைதொறுந்தொறு
மண்டலீகரைநந்திபிரம்படி மகுடகோடியிற்புடைக்கவே (பவ)

, தடுப்பதொருகரங் கொடுப்பதொருகரந் தரித்தசுடர்மழு விரித்த
தாருகாம், எடுத்தசிறுமறி பிடித்தவொருகரமிலங்கப்பணியணிதுல
கவே, அடுத்தவொருபுலிகொடுத்தசோமனுமாவைகொடுத்தவிதாவைச் சே
யும் உடுத்ததிருமருங்கசையமாலயன் றொடுத்தபரிகரி மிசையவே(ப

, தொடருமொருபெருச்சாளியேறியதோன்றல்செயப்படைதாங்கவே
டல்குலாவியதோகைவாகனத் தாசுவேல்வலம் வாங்கவே
லமாயினிற்கொன்றைமாலிகை பதக்கமணியொளிதேங்கவே
டையநாயகன்வரவுகண்டுகண் டுலகெலாந்தழைத்தோங்கவே (பவ)

இடியின்முழக்கொடு படருமுகிலென யானைமேற்கன பேரிமுழக்க
ம் அடியின்முழக்கமும் பாந்து திசைக்கரிதுதிக்கைப்பாற் செவிபுதை
வே, அடியர்முழக்கிய திருப்பல்லாண்டிசை யடைத்த செவிகளுந்தி

றக்கழுவர்கள், வடிசெய்தமிழ்திரு முறைகளொருபுற மறைகளொரு
றம்விளங்கவே,

௫, கனகதம்புருகின்னரங்கழ வாசவீணைமிழற்றவே
யனகர்திருமுத்தின் சிவிகைகவிகை பொன்னாலவட்ட மிழற்றவே
வனிதைமார்பலருஞ்செஞ்சாமரைவரிசைவிசிறிசுழற்றவே
தனதனிந்திரன்வருணனமுதலிய சகலதேவரும்வாழ்த்தவே (பவ

௬, சைவர்மேவிடச் சமணர்கீழிடச் சகலசமயமுமேற்கவே
கைவலாழியங்கருணைமாலொடு கமலத்தோன்புடைகாக்கவே
ஐவர்நாயகனவந்தனன்பல வமரர்நாயகன்வந்தனன்
தெய்வநாயகன்வந்தனனெனச் சின்னமெடுத்தெடுத்தார்க்கவே (பவ

௭, சேனைப்பெருக்கமுந்தானைப்பெருக்கமுந் தேரின்பெருக்கமுந் தா
ன்பெருக்கமும், ஆனைப்பெருக்கமுங் குதிரைப்பெருக்கமுமவனிமுழு
துநெருங்கவே, மோனக்கொடிகளின் காடுநெடுவெளி மூடி யடங்
லுமோடியிருண்டபி, னேனைச்சுடர்விரி யிட்டபகேதன மெழுந்து திசை
திசைவிளங்கவே, (பவனி

௮, கொத்துமலர்க்குழல் தெய்வமங்கையர் குரவைபரவையைநெருக்க
வே, மொத்ததிருச்செவி யிருவர்பாடல்களுலகமேழையு முருக்கவே
மத்தளம்புயல்போன்முழங்கிட மயிலனார்நடம்பெருக்கவே
சத்திபயிரவிகௌரிகுழன்மொழித் தையலாளிடமிருக்கவே (பவ)

பவனிகாணப் பெண்கள்வருகிற

விருத்தம்,

பாலேறும்விடையில்வருந்திரிகூடப் பெருமானார்பவனிகாணக்
காலேறுங்காமனுக்கையேறும் படைப்பவுஞ்சாய்க்கன்னிமார்கள்
சேலேறுங்கலகவிழிக்கணைதீட்டிப் புருவநெடுஞ்சிலைகள்கோட்டி
மாலேறப்பொருதுமென்று மணிச்சிலம்புமுரசறையவருகின்றாரே,

பெண்கள்சொல்லுகின்ற-கண்ணிகள்,

இராகம் - புன்னாகவராளி - சாப்புதாளம்,

௧, ஒருமானைப்பிடித்துவந்த பெருமானைத்தொடர்ந்தவரு
மொருகோடிமான்களைப்போல் வருகோடிமடவா

௨, புரிநூலின்மார்பனிவ னய்யனென்பாரயனாகிப்
பொங்கரவமேதுதனிச் சங்கமேதென்பா

௩, விரிகருணைமாலென்பார் பாலாகில்விழியின்மேல்
விழியுண்டோமுடியின்மேல் முடியுண்டோவென்பார்

இருமாலுநான்முகனுந் திருமாலுமவருமையா
ளீசனிவன்திரிகூட வாசனிவனென்பார்

ஒருகைவளைபூண்டபெண்கள் ஒருகைவளைபூணமறந்
தோடுவாரநகைப்பவரை நாடுவார்கவிழ்வார்

மெய்வளையுமறவுடைய தெய்வநாயகன்முடித்த
வெண்மதியும்விளங்குதெகைகள் பெண்மதியோவென்பார்

இருதனத்தாவிக்கைதன்னை யரையிலுடைதொடுவார்
இந்தவுடைரவிக்கையெனச் சந்தமுலைக்கிடுவார்

கருதுமனம்புறம்போகக் கண்ணுக்குமையெடுத்த
கையுமாயொருகண்ணிட்ட மையுமாய்வருவார்

நிருபனிவனன்னகரத் தெருவிலேநெடுநேரம்
நில்லானோஒருவசனஞ் சொல்லானோவென்பார்

பைவளைத்துக்கிடக்குமிவன் மெய்வளையும்பாம்புகட்குப்
பசியாதோதென்றலைத்தான புசியாதோவென்பார்

இவளைச்[illegible]நக்தோளழுந்த விவன்மார்பிலழுந்தாத
தென்னமுலைநமக்கெழுந்த வன்னமுலையென்பார்

மைவளையுங்குழல்சோரக் கைவளைகொண்டானிதென்ன
மாயமோசடைதரித்த ஞாயமோவென்பார்

வசந்தவல்லி வருகிறாள் - விருத்தம்,

நன்னகர்ப்பெருமான்முன்போய நாணமுங்கலையுந்தோற்ற
கன்னியர்சனிப்போற்காட்டிக் காமவேள்கலகமூட்டிப்
பொன்னணிதிலகந்தீட்டிப் பூமலர்மாலைசூட்டி
வன்னமோகினியைககாட்டி வசந்தமோகினிவந்தாளே,

இராகம்-கலயாணி-ஆதிதாளம்,

கண்ணிகள்,

வங்காரபூஷணமும பூட்டிதிலகந்தீட்டி
மாரனைக்கண்ணாலே மருட்டிச்
சிங்காரமோகனப்பெண்ணாள் வசந்தவல்லி
தெய்வரம்பைபோலவேவந்தாள்

கண்ணுக்குக்கண்ணிணைசொல்லத் திரிகூடற்
கண்ணுதலைப்பார்வையாலவெல்லப்
பெண்ணுக்குப்பெண்மயக்கவே - வசந்தவல்லி
பேடையன்னம்போலவே வந்தாள்

௩, கையாரச்சூடகமிட்டு மின்னாரைவெல்லக்
கண்ணிலொருசூடகமிட்டு
ஒய்யாரமாகநடந்து வசந்தவல்லி
யோவியம்போலவேவந்தாள்

௪, சல்லாபமாதுலீலர் - குற்றாலநாதர்
சங்கரெடுலவீதிதனிலே
உல்லாசமாதுரதிபோல் - வசந்தவல்லி
யூர்வசியுநாணவேவந்தாள்,

இதுவுமது,
இராகம் - பைரவி - அடதாளசாப்பு
கண்ணிகள்,

௧, இருண்டமேகஞ்சுற்றிச்சுருண்டுசுழியெறியுங்கொண்டையாள் குழை
ஏறியாடிநஞ்சைச் சூறையாடும்விழிக்கெண்டையாள்
திருந்தப்பூமுருககி னரும்புபோலிருக்கு மிதழினாள் - வரிச்
சிலையைப்போல்வளைந்து பிறையைப்போலிலங்குநுதலினாள்

௨, அரம்பைதேசவில்லும் விரும்பியாசைசொல்லுபுருவத்தாள்-பிறர்
அறிவையர்க்குமொரு கருவமிருக்குமங்கைப்பருவத்தாள்
கரும்புபோலினித்து மருந்துபோல்வடித்த சொல்லினாள் கடல்
கத்துந்திரைகொழித்த முத்துநிரைபதித்தபல்லினாள்

௩, வல்லினழகையெட்டிப் பார்க்குமூக்கிலொருமுத்தினாள் - மதி
படருமவடிவுதங்கி யழகுகுடிகொளுமூத்தினாள்
வில்லுபபணிபூணந்து வல்லிக்கமுகைவென்ற கழுத்தினாள்-ஜகம்
விலையிட்டெழுதியின்பநிலையிட்டெழுதுந்தொய்யி லெழுத்தினாள்

௪, கல்லுப்பதித்ததங்கச் செல்வக்கடகமிட்டசெங்கையாள்-எங்கும்
கச்சுக்கிடக்கினுந்தித்திச்சுக்கிடக்கு மிருகொங்கையாள்
நல்லுங்கருத்தர்மனக் கல்லுஞ்சுழிக்குமெழிலுந்தியாள் மீது
ஒழுகுகொண்டுள்ளத்தை விழுக்குஞ்சிறுரோமபுந்தியாள்

௫, துடியுள்ளடங்கியொருபிடியுள்ளடங்குஞ்சின்னவிடையினாள்-காமத்
துட்டனரண்மனைக்குக்கட்டுங்கதலிவாழைத்துடையினாள்
அடிகெருவர்னச்சேலையெடுத்துநெறிபிடித்தவுடையினாள்-நட
வன்னநடையிலொரு சின்னநடையினாள்

வெடித்தகடல்அமுதினை யெடுத்துவடிவுசெய்தமேனியாள்-ஒரு
வீமப்பாகமபெற்ற காமப்பாலுககொத்தசீனியாள்
பிடித்தகசுந்தவல்லிக்கொடிபோல் சந்தவல்லிபெருக்கமே-சத்தி
பீடவாசர்திரிகூடநாதர்சித்சமுருக்குமே

வசந்தவல்லி - பந்தடிக்கின்ற

விருத்தம்,

வித்தகர் திரிகூடத்தில் வெளிவந்தவசந்தவல்லி
தத்துறுவிளையாட்டாலோ தடமுலையணைப்பினாலோ
கத்தணிகரங்கள்சேர்ப்ப நாலடிமுன்னேயோங்கிப்
பத்தடிபின்னேவாங்கிப் பந்தடிபயிலகின்றாளே,

இராகம் - பைரவி - சாப்புதாளம்.

கண்ணிகள்.

௧, செங்கையில்வண்டு கலீர்கலீரென்று செயஞ்செயமென்றாட - இடை
சங்கதமென்றுசிலம்பொடு தண்டைகலந்தாட - இரு
கொங்கைகொடும்பகைவென்றனமென்றுகுழைந்துகுழைந்தாட மலர்ப்
பைங்கொடிநங்கைவசந்தசௌந்தரி பந்துபயின்றனளே

௨, பொங்குகனங்குழைமண்டியகெண்டைபுரண்டுபுரண்டாடகுழன்மங்
குலில்வண்டுகலைந்தது கண்டு மதன்சிலைவண்டோட - இனி
இங்கிதுகண்டுலகென்படுமென்படுமென்றிடைதிண்டாட - மலர்ப்
பங்கயமங்கைவசந்தசௌந்தரிபந்துபயின்றனளே

௩, சூடகமுன்கையில்வால்வளைகண்டிரு தோள்வளைநின்றாட - மின்னார்
பாடகமுஞ்சிறுபாதமுமங்கொருபாவனைகொண்டாட
நாடகமாடியதோகைமயிலென நன்னகர்வீதியிலே
யாடகவல்லிவசந்தவொய்யாரி யடர்ந்துபந்தாடினளே

௪ இந்திரையோவிவள் சுந்தரியோதெய்வ ரம்பையோமோகினியோ மன
முந்தியதோவிழிமுந்தியதோகரமுந்தியதோவெனவே - உயர்
சந்திரசூடர்குறும்பலவீசுரர் சங்கணிவீதியிலே - மணிப்
பைந்தொடிநாரிவசந்தவொய்யாரி பொற்பந்துகொண்டாடினளே.

இதுவும் வசந்தவல்லி பந்தாடுகின்ற

விருத்தம்,

கொந்தடிப்பூங்குழல்சரியநன்னகரில் வசந்தவல்லிகொடியகாமன்
முந்தடிபித்தடியிடைபோய் முன்னடிநாலடிநடந்துமுடுகிமாதர்
சந்தடியிற்றிருகியிடசாரிவலசாரிசுற்றிச்சுகிமோர்சுழப்
பந்தடிக்கும்பாவனையைப்பார்க்கவயனுமிரண்டுகண்படைத்திலானே.

தரு - காம்போதி - ஆதிதாளம்.

பல்லவி,

பந்தடித்தனள் வசந்தசுந்தரி விந்தையாகவே.

அநுபல்லவி,

மந்தரமுலேயசலாட மகரக்குழைகளூசலாடச் - சுந்தரவிழிபூசலாடத்
தொங்கததொங்கத்தொங்கத் தொம்மெனப் (பந்த)

சரணங்கள்,

௧, பொன்னினொளிவில்வந்துதாவியமின்னினொளிவுபோலவே
சொன்னயுகதனொகடிகடித தோழியருடன்கூடிக்கூடி
கனகாத்திரிகூடம்பாடி நகுர்ததததிருதிகுர்ததோமெனப் (பந்)

வசந்தவல்லி - சுவாமியைக்காண்கிற

விருத்தம்,

வருராகுவீதிதன்னில வசநதபூஙகோதைகாலி
லிருபந்துகுதிகொண்டாட விருபந்துமுலேகொண்டாட
வொருபந்துகைகொண்டாட வொருசெப்பிலஞ்சிபந்துந்
தெருவந்துவித்தையாடுஞ் சித்தரையெதிர்கண்டாளே

தரு-இராகம்-அடாணு ரூபகதாளம்,

பல்லவி,

இந்தச்சித்தராரோ - வெகு

அநுபல்லவி,

விந்தைக்காரராக விடையில்வந்தாரோ (இந்த)

சரணங்கள்,

௧, நாகம்புயத்திற்கட்டி நஞ்சுகழுத்திற்கட்டிக்
காகமனூகாமலெங்கும் காடுகட்டி
பாகாதனிலொருபெண் பச்சைக்கிளிபோல்வைத்து
மோகமாயொருபெண்ணே முடியில்வைத்தார் (இந்த)

௨, மெய்யிறசிலம்பழகும் கையின்மழுவழகும்
மையார்விழியார்கண்டால் மயக்காரோ
செய்யசடையின்மேலே திங்கட்கொழுந்திருக்கப்
பையைவிரிக்குதமமாபாம்புசும்மா (இந்த)

௩, அனைக்கண்பார்வையாலே யனங்கன்றங்கமாக
உருக்கிப்போட்டார்கண்டவுடனேதான்
பெருக்கமபார்க்கிலெங்கள் திருக்குற்ருலர்போல
விருக்குதிவர்செய்மாய மொருக்காலே, (இந்த)

தோழிமார்சொல்லக்கேட்டு

வசந்தவல்லி - மோகங்கொள்ளுதல்,

விருத்தம்,

திங்களைமுடித்தார்கண்டாய் திரிகூடச்செல்வர்கண்டா
யெங்குளசித்துகளெல்லா மிறையவரிவரேயென்று
நங்கைமார்பலருங்கூற நன்மொழித்தேறன்மாந்தி
மங்கையர்வசந்தவல்லி மனங்கொண்டாள்மயல்கொண்டாளே.

இ ள்-புன்னாகவராளி-ரூபகதாளம்,

கண்ணிகள்,

முளரிபரவினியாளே முழுப்பலவின்கனிதானே
கனியிலவைத்தசெந்தேனே காந்துருக்கவந்தானே
தினகரன்போற்சிவப்பழகு திருமிடற்றிற்கருப்பழகும்
பனகவணிக்காதுங்கண்டாற் பாவையுந்தானுருகிடாதோ

வாகனைக்கண்டுருகுதையோ மயக்கமதாய்வருகுதையோ
மோகமெனபதிதுதானோ முன்னமேநானறிவேனோ
ஆகமெல்லாம்பசந்தேனே யன்னைசொல்லுங்கசந்தேனே
தாகமன்றிப்பூணேனே சரிவளையுங்காணேனே

பாங்கிகள் புலம்பல்- விருத்தம்,

நடைகண்டாலன்னந்தோற்கு நன்னகர்வசந்தவல்லி
டைகொண்டாளெதிர்போய்ச்சங்க வீதியிற்சங்கந்தோற்றாள்
நடைகொண்டானுடைதானசோண்டு தன்னுடையகொடுத்தானைய
டைகொண்டவழக்குத்தானோ வூர்கண்டதோகண்டானே,

இ-ம்-தோடி-சாப்புதாளம்-கண்ணிகள,

ஆசைகொண்டுபாரில்வீழ்ந்தாள்நேசமானென்பார் - விளை
யாடாள் பாடாள் வாடாமாலைசூடாள்காணனபார்
பேசாளுதோமோசமென்னமோசமோவென்பார்
பேயோவென்பார்பிச்சோவென்பார்மாயமோவென்பார்

ஐயோவென்னசெய்வோமெனபார்தெய்வமேயென்பார்-களைப்
பாச்சோவென்பார் மூச்சோவென்யார் பேச்சேதோவெனபார்
கையிற்றிருநீறெடுப்பார் தையலாரெல்லாம் - சூலக்
கையாதிரிகூடநாதா கண்பார்யென்பார்

வசந்தவல்லியைப் - பாங்கிகளுபசரித்தல்

விருத்தம்,

வானவர்திருக்குற்றாலர் மையலால்வசந்தவல்லி
தானுடலசோர்ந்தாளென்று தமனியமாடஞ்சேர்ந்து

மேனியாரழகுதோற்ற மின்னனார்விழிந்தபேனாக
கூனைகொண்டமிழ்ந்துவார்போற் குளிர்ச்சியாலவே.

இ-ம-கல்யாணி-சாப்புதாளம்-கண்ணிகள்,

க, முருகுசந்தனக்குழம்பு பூசுவார் - விரகத்தீயை
மூட்டிமூட்டிவிசிறிவீசுவார்
கருகுதேயுடலுருகுதேயென்பார் - விரித்தபூவுங்
கரியுதேமுத்தம பொரியுதேயென்பார் மதுரீ)

உ, அருகிலிருந்துகலைதடத்துவார எடுத்துமாதர்
அணைத்துவாழைக்குருத்திற்கிடத்துவார்
பெருகுநன்னகர்க்குறும்பலாவினுர் - வசந்தமோகினி
யெருகிலாவினொடுகுலாவினுள்,

வசந்தவல்லி - சந்திரதூஷணஞ்செய்தல்

விருத்தம,

பெண்ணிலோர்குழன்மொழிக்கோர்
பங்குகொடுத்தவர்கொடுத்தபிரமையாலே
மண்ணிலேமதிமயங்கிக்கிடக்கின்றே
னுனக்குமதிமயக்கந்தானே
கண்ணிலேநெருப்பைவைத்துக்
காந்துவாருடன்கூடிக் காந்திகாந்தி
விண்ணிலேநெருப்பைவைத்தாய்
தண்ணிலாகொடும்பாவிவெண்ணிலாவே,

இ-ம-வராளி-ஆதிதாளம்-கண்ணிகள்,

க, தண்ணமுதுடன்பிறந்தாய், வெண்ணிலாவே-அந்த
தண்ணளியையேன்மறந்தாய் வெண்ணிலாவே
பெண்ணுடன்பிறந்ததுண்டோ வெண்ணிலாவேஎன்றால்
பெண்மைகண்டிரங்காயலாமோ வெண்ணிலாவே

உ, விண்ணிலேபிறந்ததற்கோ வெண்ணிலாவே - எரு
விட்டுநெறிந்ததற்கோ வெண்ணிலாவே
கண்ணில்விழியாதவர்போல் வெண்ணிலாவே-மெத்த
காந்தியாட்டமாடுகிறாய் வெண்ணிலாவே

௩, ஆகடியம்செய்தல்லவோ வெண்ணிலாவே-நீதா
னட்கடியம்போற்குறைந்தாய் வெண்ணிலாவே
மோகம்வராக்காணேனென்றால் வெண்ணிலாவே-அங்க
வேகமுனக்கானதென்ன வெண்ணிலாவே

வசந்தவல்லி - பாங்கிக்குரைத்தல்

இ-ம் கல்யாணி-சாப்புதாளம் - கண்ணிகள்

௧, மெய்யார்க்குமெய்யர்திரி கூடநாயகர்வீதியில் - மேக
மைபலகொண்டேனந்தச் செய்தியைக்கேளாயடீ சகியே
செய்யச்சடையுந்திருக் கொன்றைமாலையழகு - மவர்
கையின்மழுவுமென் கண்ணைவிட்டேயகலாதே,

௨, தன்னைக்கொழுந்தணி தெய்வக்கொழுந்தைநான்கண்டு கு
திங்கட்கொழுந்தையுந் தீக்கொழுந்தாக்கிக்கொண்டேனே (டீ)
சந்தக்குழைபாகனைச் சங்கமறுகினிற்கண்டு - இந்த
செங்கைக்குட்சங்கமுஞ் சேர்ந்துமறந்துவிட்டேனே,

௩, மன்றற்குளவிதினங்கொட்டக்கொட்டவொர்ந்தேனே
தென்றற்குளவிதினங் கொட்டக்கொட்டநொந்தேனே
குன்றச்சிலையாளர்குற்றாலநாதன்முன்போனேன் - மதன
வென்றிச்சிலைகொண்டு மெலமெல்லப்பொருதானே

௪, பெம்மானைநன்னகர்ப் பேரானவீதியிற்கண்டு - அவர்
கைமானைக்கண்டுகலைமானைநெகிழவிட்டேனே
செம்மேனிதன்னிற்சிறுகறுப்பானைநான்கண்டு இப்போ
அம்மாவென்மேனியடங்கலுமேகறுத்தேனே.

௫, வெள்ளிவிடையில் வியாழம்புனைந்தானைக்கண்டு - இந்த
நாளியதிங்களை ஞாயிறுபோலக்கண்டேனே
எள்ளளவூணுமுறக்கமுமில்லாரைக்கண்டு - நானும்
தெள்ளியவூணுமுறக்கமுமற்றுவிட்டேனே.

பாங்கிபழித்தல் விருத்தம்,

தனிப்பெண்ணிக்கணுபோல்வந்த தமனியக்கொடியேமாதர்
துணைப்பெற்றணைவசந்தவல்லி சொன்னாயே தகைமைக்கென்சொல்வோ
வளைப்பெண்ணுக்காசைபூண்டு வளர்சங்கமறுகினூடே
நகைத்தமாடேறுவார்க்கோ நங்கைநீமயல்கொண்டாயே,

வசந்தவல்லி சுவாமிகளைப்புகழ்ந்துகூறல்.

இ-ம்-சௌராஷ்டிரம்-ரூபகதாளம்.

கண்ணிகள்,

மன்னவர்குற்றாலர்செய்தி யின்னமின்னங்கேளாயோமானே - அவர்
மாசனத்தின்மால்விடைக்குலோகமெல்லா மோரடிகண்மானே
சன்னிதியினபேறல்லவோ பொன்னுலகிற்றேவர்செல்வமானே - தினமு
சந்திரரும் சூரியரும் வந்திறங்கும் வாசல்கண்டாய்மானே

வசந்தவல்லி பாங்கியைத் தூதனுப்புதல்

தரு - இராகம் - காம்போதி - ஆதிதாளம்,

பல்லவி

தூதுநீசொல்லிவாராய்பெண்ணே - குற்றாலர்முன்போய்த்
தூதுநீசொல்லிவாராய்பெண்ணே

அநுபல்லவி.

ஆதிநாட்சுந்தரர்க்கா தூதுபோனவர்பாலே (தூதுநீ)

சரணங்கள்,

க, உறங்கும் உறக்கமுமவாராது மாயஞ்செய்தாரை
மறந்தால மறக்கவுங்கூடாது - பெண்ஜனமென்று
பிறந்தாலும்பேராசையாகாது - ஆகாவென்றாலும்
அறிந்துஞ்சலுகைக்காரர்க்காசையானேனிப்போது (தூது)

உ, நேற்றைக்கெல்லாங்குளிர்ந்துகாட்டி - இன்றுகொதிக்கும்
நிதியிலாப்பாவிக்கென்னபோட்டி - நடுவேயிந்தக்
காற்றுக்குவந்ததொருசேட்டி விரகநோய்க்கு
மாற்றுவருந்துமுகத்தை மருந்தென்றுபாருஞ்சாட்டி (தூது)

ங, வங்காளத்தின்நேரம்வரச்சொல்லு வாராதிருந்தால்
மாலையாகிலுந்தரச்சொல்லு குற்றாலநாதா
தாராவிட்டாலென்னெஞ்சைத்தரச்சொல்லு தாராதிருந்தால்
தாம்பெண்ணாகியபெண்ணை நான்விடேனென்றுசொல்லு (தூது)

வசந்தவல்லி பாங்கிக்குச் சந்திசம்சொல்லுதல்

விருத்தம்,

செவ்வேளையீன்றருள்வார் சிலவேளையென்றருள்வார் திரும்பத்தாமே
யவ்வேளையழைத்தருள்வாரார்வேளையொருவருக்குமறியொணாதால்
கைவேழமுரித்தவர்குற்றாலர்கொலுவமருங்குறிகாணுங்கால
எவ்வேளைபலவுமுண்டுவியனவேளை யான்சொல்லக்கேளாயின்னறோ.

தரு-இராகம்-பியாகடை-ஆதிதாளம்,

க, திரிகூடராஜருக்குத் திருவனந்தலமுதலாகத்
தினமுமொன்பதுதரங் கொலுவிற்சகியே

உ, பெரிதானவபிஷேகமெழுகாலமுமொருவர்
பேசுதற்குச்சமயமல்ல கண்டாயசகியே

ங, வருநாளிலொருமூன்று திருநாளும்வசந்தனு
மர்த்தவழிவருஷவழி சிறப்புஞ்சகியே

ச, ஒருநாளுக்கொருநாளில் வியனுக்குழன்மொழிப்பெண்
ணுயர்ந்திருக்குங்கொலுவேளை கண்டாயசகியே

௫, பெத்தரிக்கமிகுந்திருக்கும குற்றாலநாதலிங்கர்
பெருங்கொலுவிற்சமய — மறியாமற்சகியே

௬, சித்தரொடுதேவர்கணஞ் சிவகணங்கள்தடைசெயத்
திருவாசற்கடைநிற்பார் — சிலபேர்சகியே

௭, அத்தலைபிற்கடங்கவர்கள் நந்திபிரம்படிக்கொதுங்கி
ஆட்கொண்டார்குறட்டில்நிற்பார் — சிலபேர்சகியே

௮, மைத்தநங்கண்மாதர் விட்டலண்டுகளுங்கிள்ளைகளும்
வாசல்தொறுங்காத்திருக்கும் — கண்டாயசகியே

௯, கோலமறையோதிபசங்கரவிசுவநாதனருள்
குற்றாலச்சிவராமநம் — செய்யுஞ்சகியே

௰, பாலாறுநெய்பிரூபயபிஷேகமுநைவேத்தியமும்
பணிமாறுகாலமுங் — கொண்டருளிச்சகியே

௰௧, நாலுமறைப்பழம்பாட்டு மூவர்சொன்னதிருப்பாட்டு
நாலுகவிப்புலவர்புதுப் — பாட்டுஞ்சகியே

௰௨, நீலகண்டர்குற்றாலர் தேவியுடன்கொலுவிருப்பார்
நீசகமில்லையெலலார்க்கும் — பொதுக்காண்சகியே

௰௩, அப்பொழுதுகுற்றாலர் தேவியுடன்கொலுவிருப்பார்
ஆசைசொல்லக்கூடாது — கண்டாய்சகியே

௰௪, முப்பொழுதுந்திருமேனி தீண்டுவார்வந்துநின்று
முயற்சிசெய்யுந்திருவநந்தற் — கூடிச்சகியே

௰௫, கொப்பழகுகுழன்மடந்தை பள்ளியறைதனிலிருந்து
கோயில்புகுமேகாந்தச் — சமயஞ்சகியே

௰௬, மைப்பழகுவிழியாயென்பெருகாளைநீசொல்லி
மறுமாலைவாங்கித் — தாராய்சகியே

கொச்சகம்,

தெண்ணீர்வடவருவித்தீர்த்தத்தார் செஞ்சடைமேல்
விண்ணீர்புனைந்தார்விரக வெம்மைக்காற்றுமல்
கண்ணீர்நறுமபுனலாய்க் கைவளையேசெய்யாயாய்
உண்ணீரிற்கூட லுரைக்கிணறுசெய்வாளே

கூடல்சிந்து,

இராகம்-பந்துவராளி-தாளம்-திரிபுடை,

௧, பாடியமறைதேடியநாயகர் பன்னகர்பணிகன்னகர்நாயகர்
பாவலர்மனுக்காவலர் நாயகர்பதஞ்சலிபணியாளர்

௨, கொடியமதிசூடியநாயகர்குழன்மொழிபுணரழகியநாயகர்
குறும்பலாவினிற்கூடுவோரமேனிற்கூடலேகூடாய்

விருத்தம்,

ஆடல்வளை வீசிவிலையக் கனர்முலைபோட்டசங்கமாங்குவிட்டில்
கேடல்வளைக்குறிபோலக் கடலவளைத் திருந்துவல்லிதியங்கும்போதில்
கூடல்வளைக்காமசைய மாத்திரைக்கோலேந்திமணிக்கூடைதாங்கி
மாடமருகூடுதிரிகூடமலைக்குறவஞ்சிவருகின்றாளே,

குறத்திவருதல் - ஆசிரியப்பா,

சைவமுத்திரையைவானின்மேற்றருக்குந்
தெய்வமுக்கலைசேர் திரிகூடமலையான்
வான்புனலதுதட் டமடைக்கு நகினுக்குத்
தேன்புரையேறுபூஞ் சித்திரநதியான்
ஏரிநீர்செழிக்கவாரிநீர்கொழிக்கு
மாரிநீர்வளர்தென்னாரியநாட்டான்
கன்னிமாப்பழுக்குக் கதலிதேன்கொழிக்குச்
செந்நெல்காக் களிக்குநன்னகர்ப்பதியான்,
ஓராயிரமறையோங்கியபரியான்
ஈராயிரமருப்பேந்தியயானையான்
சேவகவிருதுஜெயவிடைக்கொடியான்
மூவகைமுரசுமுழங்குமண்டபத்தான்
அண்டகோடிகளை யாணையாலடக்கிக்
கொண்டல்போற்கவிக்குங் கொற்றவெண்குடையான்
வடலசுந்தரிகுழல் வாய்மொழியருட்கண்
கோலவண்டிணங்குங் கொன்றைமாலிகையான்
பூவளர்செண்பகக் காவளர்தம்பிரான்
தேவர்கள்தம்பிரான் திருவருள்பாடி
இறகுநீறணிந்து திலகமுமெழுதிக்
குலமணிப்பாசியுங் குன்றியும்புனைந்து
சலவைசேர்மருங்கினிற் சாத்தியகூடையும்
வலதுகைப்பிடித்த மாத்திரைக்கோலும்
மொழிக்கொருசப்பும முலைக்கொருகுலுக்கும்
விழிக்கொருசிமிட்டும் வெளிக்கொருபகட்டுமாய்
உருவசிஅரமபை கருவமுமடங்க
முறுவலின்குறும்பால் முனிக்குறும்படங்க
கமனிக்குமுனையால் சபையெலாமடங்கக்
கமனிக்குமவனுங் கடைக்கண்ணிலடங்கக்
கமனுக்குமவனுங் கடைக்கண்ணிலடங்கக்
கொட்டியவுடுக்குக் கோடாங்கிக்குறிமுதல்
மட்டிலாக்குறிகளுங் கட்டினிலடக்கிக்
கொங்கணமாரியங் குச்சிலர்தேசமும்

